*உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர் களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்தரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.*

*(நாகார்ஜுன மலைச்சிற்பம், கி.பி. இரண்டாம் நூற்றாண்டு. பட உதவி : நேஷனல் மியூசியம். புது தில்லி)*

**ANNAMACHARYA** - Tamil translation by Rama. Sundaram of Adapa Ramakrishna Rao's English monograph. Sahitya Akademi, New Delhi.



முதல் வெளியீடு 1996
ISBN 81-7201-935-1

**சாகித்திய அக்காதெமி**

**தலைமை அலுவலகம்**
இரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி-110 001.

**விற்பனை**
'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி-110 001.
'குணா பில்டிங்', 304-305, அண்ணா சாலை, தேனாம்பேட்டை, சென்னை-600 018.
ஜீவன் தாரா பில்டிங், 4ஆவது மாடி, டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா-700 053.
172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை, தாதர், பம்பாய்-400 014.
109, ஜே.ஸி. சாலை, பெங்களூர்-560 002.

**விலை ரூ. 15-00**

*அச்சிட்டோர்: எமரால்ட் கம்ப்யூட்டர் ஹவுஸ்*
*17, மேற்கு அரசமரம் தெரு*
*சென்னை - 600 029*

ரசிகர்களுக்கெல்லாம்

முதல்வரான

ஸ்ரீ வெங்கடேஸ்வரருக்குச்

சமர்ப்பணம்

# பொருளடக்கம்

# முன்னுரை

மிக உயரிய நிலையிலுள்ள, ஈடு இணையற்ற, இருளுக்கப் பால் ஒளிப்பிழம்பாய்த் திகழும், எல்லாப் பிராணிகளுக்கும், தவறாது உதவி செய்யும், ஒரே தோழனாக இருக்கும், கடவுளின் வல்லமை யிலும், அவன் எங்கும் நிறைந்திருக்கிறான் என்ற உண்மையில், நம்பிக்கையையும், பாடல்களிலும், செய்யுள் களிலும், உறுதிப்படுத்துவது, சில ஆசி வழங்கப்பட்ட ஆன்மாக் களுக்கே கிடைத்த பேறாகும். அன்னமாச்சார்யா, கடவுளுக்கே உரிய இந்த இசைவாணர்கள் குழுவைச் சேர்ந்தவர். இசை வாணர்களின் உள்ளக்கிளர்ச்சியை வெளிப்படுத்தும் சொற்கள், இலக்கியத்தை வளப்படுத்துவதுடன், இறைவனை நோக்கிப் பயணம் செய்யும் மனித ஆன்மாவின் சொல்லொணாத் துன்பத் தையும் பரவசத்தையும் உணர்த்துகின்றன.

அன்னமாச்சார்யா, திராவிட மொழிகள் குடும்பத்தில் முக்கிய மாகக் கருதப்படும் தெலுங்கில், ஆயிரக்கணக்கான பாடல்கள் இயற்றினார். அவர், இறைவனை, உலகெங்கும் நிறைந்து இருக்கும் திருமாலின் அவதாரமான, கண்கவரும் உருவங் கொண்ட, ஸ்ரீ வெங்கடேஸ்வரராகக் கண்டார். இறைவன், அவரைத் தன்னுடைய ஆஸ்தானக் கவிஞனாகத் தெரிந்தெடுத் தார். ஒவ்வொரு நாளும், அன்னமாச்சார்யா, புதுப்பாக்கள் புனையும் நேரத்தை, அவர் ஆவலோடு எதிர்பார்த்திருந்தார்.

அன்னமாச்சார்யா காலத்தில், அதாவது, சுமார் ஐநூறு ஆண்டுகளுக்கு முன்பு, அவருடைய இசைக் காவியங்கள், மிகவும் புகழ்பெற்றிருந்தன. ஆனால், ஏதோ இனந்தெரியாத காரணத்தால், இடையில், மக்கள் அவைகளைப் பாடும் வழக்கத்தைச் சிறிது சிறிதாகக் கைவிட்டு விடவே, அவை முழுதும் மறக்கப்பட்டு விட்டன. கடந்த நூற்றாண்டில், அவை மீண்டும் கண்டுபிடிக்கப்

பட்டு, பிரசுரிக்கப்பட்டன. இந்நூற்றாண்டில், அவை புகழ் பெற்றன. அறிஞர்களும், இசை விற்பன்னர்களும், கடந்த முப்பதாண்டுகளில் எடுத்துக் கொண்ட பெரு முயற்சி, தெலுங்கு பேசும் மக்கள், அன்னமாச்சார்யாவின் மேதையை அறிந்து போற்றுவதில் வெற்றி கண்டது. அவருடைய பாக்கள், உயர்ந்த எண்ணங்களையும், இறையுணர்ச்சியையும், பொருத்தமான சொற்றொடர்களையும் கொண்டவையாயிருந்தாலும், அவர் பெயர், மற்ற மொழிகள் பேசுவோருக்கு, இன்னும் தெரியாமலே இருக்கிறது. அன்னமாச்சார்யாவின் பாக்கள், மற்ற மொழிகளில், துறவிக் கவிஞர்களால் இயற்றப்பட்டிருக்கும் பாக்களுடன் ஒப்பிட, முற்றிலும் தகுதியுள்ளவை. மற்ற மாநிலத்தோரும், அன்னமாச் சார்யாவைப் பற்றி அறிந்து கொள்ள, இந்நூல் உதவும்.

நான் மேற்கொண்ட பணி அத்துணை எளிதன்று. சுமார் பதினைந்தாயிரம் பாடல்கள் வடிவில், கடவுளுடைய பொக்கிஷமே இருந்தது. நான், சில கட்டுப்பாடுகளுடன் செயல்பட வேண்டி யிருந்தது. பாடல்களைத் தெரிந்தெடுக்கும் பொழுது, உயரிய எண்ணம், உணர்ச்சி, பாவம், நோக்கம் முதலிய அம்சங்களைக் கொண்ட பல்வகைப் பாடல்களை, மக்களுக்கு அளிக்கும் அவா, என்னைத் தூண்டியது. இந்நூலிலுள்ள மொழி பெயர்ப்புகள் யாவும் என்னுடையவை. மூலப் பாடல்களின் மொழி வடிவத்தையும், உட்பொருளையும், சுவையையும், மொழி பெயர்ப்பில் கொணர மிக முயன்றிருக்கிறேன்.

துறவிக் கவிஞர்களான அன்னமாச்சார்யா போன்ற உயரிய நிலையிலுள்ளவர்களைப் பற்றி எழுத வாய்ப்பு கிடைப்பது அரிது. எனக்கு அளிக்கப்பட்ட இவ்வாய்ப்பின் சிறப்பை நன்கு உணர்வேன். பிறருக்குப் போதனை செய்யும் இப்பணியில், என் நண்பர்களிடமிருந்து, பல சிறிய, நினைவில் இல்லாத, அன்பினாலும், நேசத்தினாலும் செய்யப்பட்ட உதவிகள், பெற்றிருக்கிறேன். அந்த உதவிகள் என்னென்னவென்று நான் கூறாவிடினும், அவை மறக்கப்படவில்லை.

அடபா ராமகிருஷ்ண ராவ்

ப்ரசாந்தி நிலையம்,
2 அக்டோபர் 1987.

# 1. சமயச் சூழ்நிலை

இறையார்வம், சில சமயம், ஆனந்த வெள்ளமாகப் பெருக்கெடுக்கிற பக்திப் பாக்கள், இந்திய இலக்கியத்தின் முக்கிய சிறப்புகளில் ஒன்று. பகலவன், வருணான், காலைக்கடவுள், ஆகியோரைக் குறித்து, இந்தியாவில், ஏன், உலகிலேயே மிகப் பழமையானதாகக் கருதப்படும், புனித ரிக் வேதத்தில், மிக நேர்த்தியான துதிப்பாடல்கள் காணப்படுகின்றன. துதிப்பாடல் துறை, பல்வேறு இந்திய மொழிகளில் இறவாக்காதல் பாடல்கள் புனைந்த, அநேக துறவிக் கவிஞர்களால், மேலும் வளப்படுத்தப் பட்டது. இப்பாக்கள், ஆன்மீக அனுபவத்தின் பரிமாணத்தை அளவிடுகின்றன. இறைவனால் முதலில் கவரப்படுவதையும், அவரைப் பிரிந்த பொழுது ஏற்படும் துக்கத்தையும், மீண்டும் அவருடன் இணையும் பொழுது ஏற்படும் இன்பத்தையும், அவை விவரிக்கின்றன. ஆழ்வார்களும், நாயன்மார்களும், தமிழில் பாடிய பாடல்கள், ஜெயதேவர் வடமொழியில் பாடிய பாடல்கள், மைதிலி மொழியில் வித்யாபதி பாடிய பாடல்கள், வங்காளியில் சண்டிதாஸ் பாடிய பாடல்கள், மீராபாய், ஸூர்தாஸ், ஹிந்தியில் பாடிய பாடல்கள், குஜராத்தியில் நரசிம்ஹ மேத்தா பாடிய பாடல்கள், மராத்தியில் நாம்தேவ், துக்காராம் பாடிய பாடல்கள், கன்னடத்தில், புரந்தரதாஸர், கனகதாஸர் பாடிய பாடல்கள் மற்றும் பல தெய்வீகக் கவிஞர்கள் பாடிய பாடல்களும், ஆன்மீகப் பரவசத்திற்கும், கவிநயத்திற்கும் எடுத்துக்காட்டாக விளங்குகின்றன.

தெலுங்கு தெய்வீகக் கவிஞர்களான, அன்னமாச்சார்யா, க்ஷேத்ரய்யா, ராமதாஸ், தியாகராஜர் போன்றோர், கடவுளால் ஆசி வழங்கப்பட்ட, தெரிந்தெடுக்கப்பட்ட, இசைவாணர்கள் குழுவைச் சேர்ந்தவர்கள். இசை, இவ்வுலகத்தில் வாழும் மக்களை, விண்ணுலகிற்கே அழைத்துச் செல்லும் சக்தி கொண்டது என, அவர்கள் உணர்ந்திருந்தனர். ஆகையால், தங்களுடைய இசைத் திறமையை, மக்களின் ஆன்மீக வளர்ச்சிக்காகப் பயன்படுத்தினர். சார்ங்க தேவர், தான் இயற்றிய ‘ஸங்கீத ரத்னாகரம்’ என்ற நூலில், மனிதன், இசையின் மூலம், அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு பிறவிப் பயன்களையும் அடையலாம் என்று கூறுகிறார். ஆனால், துதிப்பாடல்கள் புனையும் ஆசிரியர்கள், இசையை, அறம் வளர்த்தலுக்கும், பிறவியறுத்தலுக்குமே பயன்படுத்தினர். தெலுங்கில் துதிப்பாடல்கள் பாடுவோரில், கால அட்டவணை

யைக் கொண்டு பார்த்தாலோ, உயரிய கவிநயத்தைக் கொண்டு பார்த்தாலோ, எண்ண வீச்சு, உணர்ச்சிப் பெருக்கு, இவைகளைக் கொண்டு பார்த்தாலோ அன்னமாச்சார்யாவே முதன்மையாகத் திகழ்கிறார். துதிப்பாடல் துறையில், அவர் ஒரு முன்னோடியாய்த் திகழ்ந்தார். இறைவனுடன் காதல் புரியும் பாடல்களையும், பக்தி செறிந்த பாடல்களையும், திறமையாகக் கையாண்டு, பிற்கால சந்ததியினருக்கு வழி கோலினார். க்ஷேத்ரய்யாவுடைய கண்ணனைப் பற்றிய காதல் ததும்பும் பாடல்களும், தியாகராஜரு டைய உணர்ச்சிப் பெருக்கெடுக்கும் இராமனின் பெருமை களைப் பாடும் பாடல்களும், அன்னமாச்சார்யா, காதல், பக்தி, ஆகிய உணர்வுகளைத் தன் பாடல்களில் கையாண்ட விதத்தை நினைவூட்டுகின்றன.

அன்னமாச்சார்யா, பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தார். தன் வாழ்நாளின் பெரும்பகுதியை, மிகவும் பிரபலமான புண்ணியத் தலங்களுள் ஒன்றான, தென்னகத்தேயுள்ள திருப்பதி யிலும், திருப்பதியைச் சுற்றியுள்ள இடங்களிலும், கழித்தார். திருப்பதியில், மனதைக் கவர்ந்த, திருமாலின் அவதாரமான ஸ்ரீ வெங்கடேஸ்வரர், ஏழு பெரும் சிகரங்கள் கொண்ட குன்றுகளின் தொடர்ச்சியின் மேல் வீற்றிருக்கிறார். இதன் காரணமாகவே, ஸ்ரீ வெங்கடேஸ்வரரை, 'ஏழு குன்றுகளுக்குத் தலைவன்,' அல்லது, எளிதாக, 'குன்றுகளின் தலைவன்' என்று மக்கள் அழைக்கின்றனர். கோயில் அமைந்திருக்கும் மிகவும் உச்சியிலுள்ள குன்று, 'வெங்கடாத்ரி' என்று அழைக்கப்படுவதால், ஸ்ரீ வெங்கடேஸ்வரர், 'வெங்கடாத்ரித் தலைவன்' என்றும் விளங்குகிறார்.

சிறு வயதிலேயே, அன்னமாச்சார்யா, ஸ்ரீ வெங்கடேஸ் வரரின் கண்ணைக் கவரும் உருவத்திற்கும், அவருடைய முகத்திலிருந்து பொங்கி வழியும் கருணைக்கும், அடிமையானார். இறைவனிடம் பக்தி செலுத்துதல், தஞ்சம் புகுதல் மூலம், எளிதாகப் பிறவியிலிருந்து விடுபடலாம் என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்ட, விசிஷ்டாத்வைத சமயமான வைணவத்தை, அவர் ஏற்றுக் கொண்டார். சமய மாற்றத்தின் காரணமாக, அன்னமாச்சார்யா, ஆழ்வார்களின் உயர்ந்த பரம்பரைக்கு வாரிசானார். கடவுள் பக்தியினால் போதையுண்டு, அவர்கள், பண்டைய, சீரிய தமிழில் திருமாலைக் குறித்துப் பாடிய துதிப்பாடல்கள், ஒரு விதத்தில், முக்கிய வைணவ ஆசான்களான,

யமுனாச்சார்யா, இராமானுஜர் ஆகியோர், உபதேசித்த வைணவக் கொள்கைகளுக்கு, அடிப்படையாக அமைந்தன. அவருக்கு முந்தைய காலத்திலிருந்த ஆழ்வார்கள் போல், அன்னமாச்சார்யா, எண்ணிக்கையிலடங்காப் பாக்கள் மூலம், திருமாலின் பெருமைகளைப் பறைசாற்றிக் கொண்டும், கடவுளிடம் தஞ்சம் புகும் கொள்கையின் சிறப்பு பற்றிப் போதித்துக் கொண்டும், வாழ்நாட்களைக் கழித்தார். ஒரு நாளாவது, திருமாலைப் பற்றிப் புதிதாக ஒரு பாடல் இயற்றாமல் அவர் இருந்ததேயில்லை என்று கூறப்படுகிறது. இறைபணியில் அவருக்குள்ள கடமையுணர்ச்சியும், 'நான்' என்ற அகந்தையே இல்லாத அவரது மனநிலையும், அவர் பாடல்களில் தெளிவாகத் தெரிகிறது.

*என் தலைவனே!*
*நின் பாதங்களில்*
*காணிக்கையாக்கும்,*
*அடியேனுடைய வணக்கங்களைத்*
*தெரிவிக்கும் செயல்களை,*
*ஏற்றுக் கொள்ளும்.*
*நின் புகழை,*
*திக்கெட்டும்*
*பரவச் செய்யும்,*
*மலர்களை*
*ஏற்றுக் கொள்ளும்.*

*பாட்டொன்றே போதும்*
*எங்களை உய்விக்க;*
*என்னுடைய மற்ற பாக்கள்,*
*நின் கருவூலத்தில்*
*உறங்கட்டும்.*
*வல்லமையுள்ளது நின் நாமம்,*
*சொல்லுதற்கோ எளிது நின் நாமம்,*
*வெகுமதிகள் பல அளிக்கும் நின் நாமம்;*
*நீர் என் பாதுகாவலர்,*
*நின் புகழுரைகளே என் பொக்கிஷம்.*

*ஆயிரம் துதிப்பாக்களைப் பாட*
*என் நாவை நீர் தூண்டுகிறீர்,*
*உம்முடைய சிறப்பை*
*என்றென்றும் பறைசாற்ற*
*என் நாவை நீர் தூண்டுகிறீர்.*

*ஆயிரம் நாமாக்களை உடைய இறைவா!*
*நின் புகழுரைகளைப் பாட*
*நான் யார்?*
*அளவில்லாக் கருணையினால்,*
*நின் புகழைப் பாட*
*எனக்கு ஆதரவளிக்கிறீர்.*

*உங்கள் கைகளில்*
*நான் ஒரு கருவியே!*
*என் பாக்களுக்குரிய பெருமை*
*என்னைச் சேர்ந்ததல்ல;*
*வெங்கடேசப் பெருமானே!*
*நின் அடிமை நான்,*
*இந்நன்றிப் பாடல்களை*
*ஏற்றுக் கொள்ளும்.*

அன்னமாச்சார்யா, ஒவ்வொரு பாடலிலும், ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் உருவம் பற்றியும், அவரது நற்பண்புகள் பற்றியும், அவர் குடி கொண்டிருக்கும் கோயில் பற்றியும், அதன் சுற்றுச் சூழல் பற்றியும் குறிப்பிடுகிறார். அநேகமாக, எல்லாப் பாக்களிலும், விசிஷ்டாத்வைதப் பிரிவைச் சேர்ந்த வைணவக் கொள்கைகள், மலரில் மணம் போல் கலந்திருகின்றன. ஆகையால், அன்னமாச்சார்யாவின் வாழ்க்கை, சிந்தனைகள் பற்றி அறிய வேண்டுமானால், வைணவ மதம் தோன்றிய வரலாறு, அதன் அடிப்படைக் கொள்கைகள், ஸ்ரீ வெங்கடேஸ்வரர், அவரது உருவச் சிறப்பு, ஆகியவை பற்றி அறியத் தேவையாகிறது.

வேதங்கள் கற்ற ஞானிகள், கடவுள், முழு முதல்வன் என்று கூறுகின்றனர். அறிஞர்கள், முழு முதல்வனே, பல கடவுள்களாகக் காட்சியளிக்கிறாரென்றும் கூறுகின்றனர். உயரிய நிலையிலுள்ள கடவுளின் பற்பல அவதாரங்களுள், மிக்க கவர்ச்சியானது,

கருணையால், உலகை உய்விக்கும் திருமால் அவதாரம். உலகங்களனைத்திலும் அவர் நிரம்பியிருப்பதால், அவர் 'விஷ்ணு' என்று அழைக்கப்படுகிறார். எல்லா உயிரினங்களுக்கும், அவரை அடைவதே தலையாய குறிக்கோள் என்பதால், அவர், 'நாராயணன்' என்று போற்றப்படுகிறார். எல்லாவித நற்பண்புகளையும் உடையவர் அவர். அவர், அன்புடையவர், இளகிய மனமுடையவர், தாராள மனப்போக்குடையவர், இரக்கமுடையவர், இனிய இதயமுடையவர். அவரிடம் தஞ்சம் புகும் பக்தர்களுக்கு, அவர், தன் ஆசியை எக்கணமும் வழங்கக் காத்திருப்பவர்.

ஆரம்ப வேத காலத்திலிருந்த முனிவர்களின், ஞானிகளின் அகக்கண்ணில் முதலில் காணப்பட்ட திருமால், உதய ஞாயிறுடன் ஒப்பிடப்பட்டு, சூரியக் கடவுளாகக் கருதப்பட்டார். ஆனால், அந்தணர் கலாச்சாரப் பாரம்பரியத்துடன், விரைவிலேயே அவரும் வளர்ச்சியுற்று, கடவுள்களுக்கெல்லாம், கடவுளாகப் போற்றப் பட்டார். மதச் சடங்குகள் தொடங்குவதற்கு முன், கட்டாயமாக இசைக்கப்பட வேண்டிய, ரிக் வேதத்திலுள்ள புகழ்மிக்க துதிப் பாடலொன்று, அறிஞர்கள், விஷ்ணுவின் உயரிய நிலையை, கண் ஒன்று வானத்தில் பரந்து கிடப்பதைப் பார்ப்பது போல் பார்க்கின்றனர், என்று உறுதியாகச் சொல்லுகிறது.[1] தீர்க்கதமஸ், மற்றொரு பாட்டில், இந்த அறிவுரையை வழங்குகிறார் : "உயரிய உண்மையை அறிய விரும்புவோனே! திருமாலின் நாமம், நீ, அறிய விரும்பும் உண்மைக்கு, உன்னை அழைத்துச் செல்லும் என்ற திட நம்பிக்கையுடன், அதை ஒரு தடவையாவது சொல்".[2] ரிக் வேதத்திலுள்ள, விஷ்ணுவைக் குறிக்கும், உருக்ரம, த்ரிவிக்ரம, பரமம் பதம் போன்ற சொற்கள், அக்காலத்தில், அவர் கடவுள் களுக்கள் முதன்மையானவர், என்பதை அறுதியிட்டுக் காட்டுகிறது. ஆனால், வேள்விகள் செய்யும் பொழுது நிறை வேற்றப்பட வேண்டிய பலவிதச் சடங்குகளில், முக்கிய இடம் கொடுக்கப்பட வேண்டிய கடவுளாகவே, அக்காலத்தில் அவர் கருதப்பட்டார். கருணைக் கடவுளாக, பக்திக்குப் பாத்திரமான ஒரே கடவுளாக அவர் மலர்ந்தது, அவரின் பிற்கால வளர்ச்சி.

ரிக் வேதத்தின் விஷ்ணு, அந்தணர்களுடைய எங்கும் நிறைந்த நாராயணனுடன் கலந்து, பிறகு, நாராயணன், விருஷ்ணி குலத்தின் பலராலும் போற்றப்படும், வசுதேவ கிருஷ்ணனுடன் கலந்து, நாளடைவில், விஷ்ணுதான் முதல் கடவுள், அவரிடம்

பக்தி செய்வதே, வாழ்க்கையின் தலையாய குறிக்கோள், என்ற வைணவக் கொள்கை தோன்றியது. வைகுண்டமே திருமாலின் இருப்பிடம், இலக்குமி அவருடைய தெய்வ இல்லாள். அன்புதான் அவருடைய முக்கிய பண்பு. பிரபஞ்சத்திலுள்ள எல்லா உலகுகளையும் படைத்தல், காத்தல், அழித்தல் தான், அவருடைய விளையாட்டு. அறத்தை வளர்த்தலும், தீயவைகளை அழித்தலும், அவருடைய செயல்கள். தீயோரைத் தண்டிக்கவும், நல்லோரைக் காக்கவும், அவ்வப்பொழுது உருவெடுத்து வருகிறார் உலகிற்கு. அந்த உருவே 'அவதாரம்' எனப்படுகிறது.

வைணவ சமய சாத்திரப்படி, உருவெடுத்தல் அல்லது அவதாரம் என்பது, திருமால், தன்னை உலகுக்குக் காட்டிக் கொள்ளும், ஐந்து முறைகளில் ஒன்று. எல்லாம் கடந்த நிலையில் அவர் வஸுதேவர், முழு முதற்கடவுள், மனித அனுபவங்களுக் கெல்லாம் அப்பாற்பட்டவர். அவர், தன்னை வெளிக்காட்டிக் கொள்ளும் நிலையில், உலகைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற தொழில்களைச் செய்பவராகக் காட்சியளிக்கிறார். அவதார நிலை, அவர் மனித உருவில், உலகில் இறங்குவதுடன் சம்பந்தப் பட்டிருக்கிறது. எல்லோரிடமும் நிறைந்திருக்கும் நிலையில், அவர் எல்லா உயிரினங்களின் இதயங்களில் குடி கொண்டு, அவை களின் உணர்ச்சிகளை ஒழுங்குபடுத்துகிறார். இறுதியாக, சிலை உருவில் பக்தர்களுக்கு, எளிதில் நெருங்கும்படியாக உள்ளார். கோயில்களிலும், வீடுகளிலும், குடி கொண்டு, பக்தர்களின் மதச் சடங்குகளை ஏற்றுக் கொள்கிறார்.

விஷ்ணு, தன்னை உலகுக்கு வெளிப்படுத்தும் ஐந்து முறைகளில், புனிதப்படுத்தப்பட்ட அவரது உருவச்சிலையையே, பக்தர்கள் விரும்புகின்றனர். ஏனென்றால், அவர்கள், கடவுளுடைய உருவ எழிலைக் கண்டு மகிழ்ந்து, அவருடைய முன்னிலையை, இங்கேயே, இப்பொழுதே அனுபவிக்கின்றனர். ஆகையால், பல தெய்வீகக் கவிஞர்கள், பிறப்பு, இறப்பு இல்லா வாழ்க்கையை அளிக்கும், விண்ணுலகுக்கு அழைத்துச் செல்லப்பட வேண்டு வதற்குப் பதிலாக, இந்நிலையில்லா உலகில், மீண்டும், மீண்டும், பிறந்து, இன்முகத்துடன் இன்னல்களை அனுபவிக்க வேண்டு மென்ற அவாவை வெளியிட்டிருப்பதில், வியப்பொன்றுமில்லை. ஒவ்வொரு பிறப்பிலும், அவர்கள், தங்கள் மனதிற்குப் பிடித்த திருமாலின் உருவச்சிலையைக் காண்பதிலிருந்து பெருகும்

இடைவிடா இன்பத்தை நுகர முடியும் என்ற உறுதியளிக்கப் பட்டால், அதுவொன்றே போதும் அவர்களுக்கு.

பக்தர்கள், உருவமுள்ளதும், உருவமில்லாததுமான, திருமாலின் சிலையை வழிபாட்டிற்கு உபயோகிக்கின்றனர். சாலக்ராமக்கல், உருவமற்ற, சங்கேதமான திருமாலைக் குறிக்கிறது என்று அவர்கள் கருதுகின்றனர்.[3] புனிதப் படுத்தப் பட்ட சிலை, நம்மனதை ஒருமைப்படுத்தும் மையப் பொருள், கடவுள் உருவத்தையே நம்முன் கொணரும் பொருள். வழிபாட்டு முறைகள் பற்றி கூறும் 'விஷ்ணு-ஸம்ஹிதை' என்ற நூல், கடவுளின் உருவச் சிலையல்லாது, அவர் மீது நம் மனதைச் செலுத்துவது இயலாது என்று கூறுகிறது. ஆகையால், அறிஞர்கள், கடவுளின் சிலையைத் தியானம் செய்வதற்குத் தெரிந்தெடுக் கின்றனர். ஆனால், அவர்கள், சிலை, கல்லோ, உலோகமோ, எதுவாயிருந்தாலும், தொழுவதற்கேற்ற வடிவமாக உருப் பெற்றிருக்கிறது, ஆனால் அச்சிலையே கடவுள் அல்ல என்று அறிவார்கள். விசிஷ்டாத்வைத மதத்தைப் பின்பற்றும் ஸ்ரீவைஷ்ணவர்கள் என்று அழைக்கப் படுபவர்கள், ஒரு படி மேல் சென்று, கடவுள் சிலை, தியானம் செய்வதற்கு நமக்குத் தூண்டுகோலாக அமைவதோடல்லாமல், கடவுளே அதில் குடி கொண்டிருக்கிறார் என்று கூறுகின்றனர். திருமாலின் சீரிய பண்புகளில் ஒன்று, அவர், நாம் எளிதில் அணுகும்படி இருத்தல். கருணை மிகுதியால், சிலை வடிவங் கொண்டு, பக்தர்கள் எளிதில் அவரை வணங்க வழிகோலுகிறார் என்று, ஸ்ரீவைஷ்ணவர்கள் கூறுகின்றனர்.

திருமால் அல்லது அவரது முக்கிய அவதாரங்களான இராமர், கிருஷ்ணர் போன்ற கடவுள்களுக்கு, நாடு முழுவதும் கோயில்கள் கட்டப்பட்டிருக்கின்றன. ஸ்ரீவைஷ்ணவ இலக்கியம், அவைகளுள் நூற்றெட்டை, மிகப் புனிதமாகக் கருதுகிறது. இவைகளுள், தென்னகத்தே ஸ்ரீரங்கத்திலுள்ள ஸ்ரீ அரங்கநாதர் கோயில், காஞ்சீபுரத்திலுள்ள ஸ்ரீ வரதராஜர் கோயில், திருப்பதியில் உள்ள ஸ்ரீ வெங்கடேஸ்வரர் கோயில் ஆகிய மூன்றும், புனித யாத்திரைத் தலங்களுள் மிகவும் புகழ் பெற்றவை. பல நூற்றாண்டுகளாக, இக்கோயில்கள் வைணவக் கொள்கைகளைச் சுற்று வட்டாரங் களில் பரப்புவதில், பெரும் பங்கு வகிக்கின்றன. வைணவ மதத்தைச் சார்ந்தவர்கள், இக்கோயில்களிலுள்ள சிலைகள்,

தாமாகவே உருப்பெற்றவை, மனிதனுடைய கைவண்ணம் அல்ல, அச்சிலைகள் ஒவ்வொன்றும், திருமாலின் ஒவ்வொரு நிலையை விளக்குகின்றன என்று, முழு மனதோடு நம்புகின்றனர். ஐந்து தலை நாகம், சேஷனின் மேல், யோக நிலையில் பள்ளி கொண்டிருக்கும் ஸ்ரீ அரங்கநாதர், வைகுண்டத்திலுள்ள ஸ்ரீ மஹா விஷ்ணுவின் அவதாரமாகக் கருதப்படுகிறார். ஸ்ரீ வரதராஜர், ஸ்ரீமந் நாராயணனாகக் கருதப்படுகிறார். பகவத் கீதையில் இறுதிப் பாடலில் கூறப்பட்டிருப்பதாக ஸ்ரீவைஷ்ணவர்கள் கருதும், தஞ்சம் புகுதல் பற்றி, ஸ்ரீ வெங்கடேஸ்வரர் போதிப்பதாகக் கருதப் படுகிறது.[5]

இந்துச் சிற்ப சாத்திரம், திருமால் சிலை, நிற்கும் நிலை யிலோ, உட்கார்ந்து கொண்டிருக்கும் நிலையிலோ, அல்லது, படுத்துக் கொண்டிருக்கும் நிலையிலோ வடிக்கப்படவேண்டு மென்று கூறுகிறது. ஸ்ரீ வெங்கடேஸ்வரர், தாமரைப் பீடத்தில், வசீகரமாக நின்று கொண்டு காட்சியளிக்கிறார். தன் தலையில், விலை மதிப்பற்ற கற்கள் பதித்த ஒரு தங்கக்கிரீடம், அணிந்திருக் கிறார். அவருடைய உடல், சொலிக்கும் ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றது. அவர், காதுகளுக்கு அழகான தாடகங்களும், கடகங்களும், காப்புகளும், ஐந்து தலை கொண்ட பாம்பின் உருவில், கை வங்கிகளும், அணிந்திருக்கிறார். அவருடைய நெற்றியின் ஒரு பகுதியில், அகலமான பச்சைக் கற்பூர வெள்ளைக் குறியொன்றிருக்கிறது. அதை, நடுவே ஒரு மெல்லிய கஸ்தூரியிலான நேர்க்கோடு பிரிக்கிறது. அவருடைய முழுதும் மலர்ந்த தாமரையைப் போன்ற கண்கள், பக்தர்கள் எல்லோரையும், சமமாகப் பார்க்கின்றன. அவை மேலேயும் பார்க்க வில்லை, கீழேயும் பார்க்கவில்லை. வழிபடும் பக்தர்களை, நேர் பார்வையினால் பார்க்கின்றன. அக்கருணைக்கண்களும், அவருடைய உதடுகளில் எப்பொழுதும் புதைந்திருக்கும் புன் சிரிப்பும், அவருடைய முகத்தை, அரிய தெய்வீக அழகுடன் மிளிரச் செய்கிறது.

இலக்குமி, அவருடைய மார்பில் வீற்றிருப்பதால், அவர் ஸ்ரீநிவாசன் என்று போற்றப்படுகிறார். மேலேயுள்ள இரண்டு கைகளிலும், சங்கு, சக்கரம் என்ற ஆயுதங்களை வைத்திருக்கிறார். கீழேயுள்ள வலது கை, வரங்களை வழங்குவது போன்ற நிலையிலுள்ளது. முட்டிக்குச் சற்று மேலேயிருக்கும் இடது கை,

சிற்ப சாத்திரத்தில் வருணிக்கப்படும், 'கட்யாவலம்பிதா' என்ற நிலையிலுள்ளது. கீழேயுள்ள இடது கைகளின் நிலை, அமைப்பு பற்றி, சிறிது விளக்கம் தேவைப்படுகிறது.

ஸ்ரீ வெங்கடேஸ்வரர், பக்தர்களின் எதிர்பார்ப்புகளுக்கு மேலாகவே வரங்களை வாரி வழங்கும் தாராள மனப்போக்கிற்குப் பெயர் பெற்றவர். இப்பண்பை, வலது கையிலிருந்து தங்கு தடையின்றி பொழியும் வரங்கள், நமக்கு உணர்த்துகின்றன. மேலும், அக்கை, அவரது பாதங்களையே காட்டுகின்றன. இச் சின்னம், பகவத் கீதையில், கிருஷ்ணனுடைய இறுதி அறிவுரை யான 'என்னிடமே தஞ்சம் புகு' என்பதை, நுட்பமாக விளக்கிக் காட்டுகிறது. எவனொருவன், அவருடைய பாதங்களை விடாப்பிடி யாகப் பிடித்துக் கொள்கிறானோ, அவன் எல்லாப் பாவங்களி லிருந்தும் விடுபட்டு, முடிவில்லா இன்பத்தை அனுபவிப்பான் என்று உறுதி அளிக்கப்படுகிறது. முட்டிக்குச் சற்றுமேலேயுள்ள இடது கையின் நிலை, பக்தர்களுக்கு, அவர்களின் உலக வாழ்க்கை யால் ஏற்படும் இன்னல்கள், முட்டியளவே, அவர்களுக்குத் தேவைப்படும் நேரத்தில், கடவுளின் உதவி தவறாமல் கிடைக்கும் என்ற உறுதியை அளிக்கிறது.

வெங்கடாத்ரி என்றழைக்கப்படும், குன்றின் உச்சியில் குடிகொண்டிருக்கும் ஸ்ரீ வெங்கடேஸ்வரர் பற்றியும், அவரது கோயில் பற்றியும், கட்டுக்கதைகளும், வரலாறுகளும் தோன்றி யிருப்பது இயற்கையே. ஆசிரியர் பெயர் தெரியாத, எந்தக் காலத்தவை என்று தெரியாத, வராஹ புராணம், ப்ரம்ஹாண்ட புராணம், பவிஷ்யோத்தர புராணம் போன்ற நூல்களில், ஸ்ரீ வெங்கடேஸ்வரர் பற்றி காணப்படும், மிகக் கற்பனை கலந்த, திறம்படக் கூறப்படும் நிகழ்ச்சிகளின் வருணனைகளில், உண்மையைக் கற்பனையிலிருந்து பிரிக்க இயலாது.

நாம் எளிதில் கண்டு கொள்ளக்கூடிய வேங்கடக் குன்று பற்றிய குறிப்பு, தமிழில் மிகவும் பழமையான இலக்கண நூலான, கிறித்து பிறப்பதற்கு ஐநூறு ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட, தொல்காப்பியத்தைப் புகழ்ந்து கூறும், பாணம்பரனாரின் சிறப்பாயிரத்தில் வருகிறது. அந்நூல், வேங்கடக் குன்று பற்றிக் குறிப்பிடுகிறதே தவிர, அக்குன்றில் வீற்றிருக்கும் கடவுளைப் பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை. இரண்டாம் நூற்றாண்டைச்

சேர்ந்த சங்கப் புலவர் மாமூலர் கூட, தனது கவிதை நூல், அகநானூறில், வேங்கடக்குன்றின் மீது வீற்றிருக்கும், ஸ்ரீ வெங்கடேஸ்வரர் பற்றிக் குறிப்பிடவில்லையாயினும், அக்குன்றில் கொண்டாடப்படும் விழாக்கள் பற்றியும், அவ்விழாக்கள், அவைகளைக் கொண்டாடுவோருக்கு அளிக்கும் செழிப்பைப் பற்றியும் பேசுகிறார். அதே நூற்றாண்டில், பிறகு இயற்றப்பட்ட, இளங்கோ அடிகளின் காவிய நூல், சிலப்பதிகாரம், வேங்கடக் குன்று பற்றிச் சொல்லுவதோடு, அதன்மீது நின்று காட்சியளிக்கும் கடவுள், நீல நிறமுடைய, சங்கையும், சக்கரத்தையும் கைகளில் வைத்துக் கொண்டிருக்கும் திருமால் என்று திட்டவட்டமாகக் கூறுகிறது. ஆனால், குன்றின் புனிதத் தன்மையும், அதன் மீது வீற்றிருக்கும் கடவுளின் சிறப்பும், உவகை மிகுதியால், பாடல்களிலும், செய்யுள்களிலும் கொண்டாடப்படுவது, புகழ்மிக்க வைணவ தெய்வீகக் கவிஞர்கள், ஆழ்வார்கள் காலத்தில்தான்.

ஆழ்வார் என்ற சொல் 'மூழ்கியிருப்பவன்' எனப் பொருள் பெறும். ஆழ்வார், ஆழத்திலெல்லாம் ஆழமான கடவுளிடம், எப்பொழுதும் மூழ்கியிருக்கும் தீவிர பக்தன்.[6] தென்னகத்தே, தமிழ் பேசும் பகுதியில், ஆறாம் நூற்றாண்டிலிருந்து ஒன்பதாம் நூற்றாண்டுவரை வாழ்ந்த, பன்னிரண்டு திருமால் பக்தர்கள், தலைமுறை தலைமுறையாக, ஆழ்வார்கள் என்று போற்றப் படுகின்றனர். அநேகமாக, எல்லோரும், ஒரு கோயிலிலிருந்து, மற்றொரு கோயிலுக்குச் சென்று கொண்டு, பரவசத்தினால், திருமால் சிறப்புகளைப் பாடிக்கொண்டு, எங்கு சென்றாலும், பக்தியைப் பரப்பிக்கொண்டு, ஆன்மா நெகிழும் பாக்களால், இலக்கியத்தை வளப்படுத்தினர். அவர்கள், இடையறாக் கடவுள் பக்தியின் மயக்கத்திலேயே நடமாடியதால், அவர்கள் எதிர்கொண்ட ஒவ்வொரு பொருளும், அவர்கள் கண்ட ஒவ்வொரு காட்சியும், தெய்வீக ஒளியால் சூழப்பட்டிருப்பது போல் தெரிந்தன. உள்ளக்கிளர்ச்சியெய்திய அவர்களிடமிருந்து, எளிதில் உணரக் கூடிய, கவிநயம் மிகுந்த பாடல்கள், பெருக்கெடுத்தன. ஒரு கருமேகத்தைக் காணுகையிலோ, நீலவண்ண நீர்ப்பரப்பாகிய கடலைக் காணுகையிலோ, ஒரு புனிதக் கோயிலிலுள்ள சிலையைக் காணுவது போல் உணர்ச்சி பெற்று, அவர்கள் பாக்களைப் பாடினர். கடலின் நீல வண்ணமும், கார்மேகங்களும், திருமாலின் கருநீல வண்ணத்தை, அவர்களுக்கு நினைவூட்டின. திருமாலின் வலிமை, சிறப்பு பற்றி, அவர்கள், நாலாயிரம்

துதிப்பாக்களைப் பாடியதில் வியப்பொன்றுமில்லை. தமிழிலுள்ள இப்பாக்கள், பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஸ்ரீவைஷ்ணவ ஆசான், நாதமுனி அவர்களால், மிக்க அன்புடன் சேகரிக்கப்பட்டு, 'நாலாயிரம்' அல்லது 'திவ்யப்பிரபந்தம்' என்று அழைக்கப்பட்டது. அவை, இன்றும், ஒவ்வொரு நாளும், தென்னகத்தேயுள்ள, எல்லா முக்கிய திருமால் கோயில்களிலும், வேதங்களிலுள்ள வடமொழி துதிப்பாடல்களுடன், பாடப்படுகின்றன.

ஆழ்வார்கள், வைணவர்களால் மிகவும் போற்றப்படு கின்றனர். ஆழ்வார்கள் பாடிய நூற்றெட்டுத் திருத்தலங்களும், தெய்வீகத் தலங்களாகக் கருதப்படுகின்றன. தமிழில், அவை பாடல் பெற்ற தலங்களென அழைக்கப்படுகின்றன. அவைகளில் இரண்டு, வைகுண்டமும், பாற்கடலும், விண்ணுலகிலுள்ளன. மற்றவை, பூமியில் உள்ளன. அவைகளில் திருப்பதி சிறப்பான இடத்தை வகிக்கிறது. ஏனென்றால், பல ஆழ்வார்கள், திருப்பதிக்கு யாத்திரை செய்திருக்கின்றனர். அவர்களில் பத்துப்பேராவது, வெங்கடாத்ரித் தலைவனின் பெருமைகளைப் பாடியிருக்கின்றனர்.

இரண்டு காரணங்களினால், அன்னமாச்சார்யா, ஆழ்வார் களின் துதிப்பாடல்களை நன்கு அறிந்தவர் எனக் கூறலாம். முதலில், அவரே பின் காலத்து ஆழ்வார், அதாவது, இறையுணர் வில் மூழ்கியவர். இறையுணர்வில் மூழ்கியதால், ஆழ்வார்களின் உள்ளக் கிளர்ச்சியின் இரகசியத்தை நன்கு அறிந்திருந்தார். திருமால்பற்றித் துதிப்பாடல்கள் புனைபவரும், இசைப்பவராகவு மிருந்ததால், பெருமை வாய்ந்த தன் முன்னோர்களான, ஆழ்வார்கள் பாடிய திருமாலைப் பற்றிய பாடல்கள், அவரது கவனத்தை இயற்கையாகவே ஈர்த்தன. இரண்டாவதாக, விசிஷ்டாத்வைதக் கொள்கையை அடிப்படையாகக் கொண்ட, வைணவத்தின் தலை சிறந்த விரிவுரையாளரான இராமானுஜர், சரியாகவே நினைத்ததுபோல், 'கடவுள் இருக்கிறார் என்பதற்கு சாட்சியம் கடவுளில் லயித்திருப்பது.'[7] ஆழ்வார்களுடைய சொற்களை, கடவுளின் கூற்றுக்களாகிய வேதத்திற்குச் சமமானவை என்று இராமானுஜர் ஒத்துக்கொண்டார். வைணவ மதத்தைத் தழுவிய அன்னமாச்சார்யா, திவ்யப் பிரபந்தத்தை ஓரளவு ஆதாரமாகக் கொண்ட அதன் தத்துவங்களைப் படிக்க, பல ஆண்டுகள் செலவிட்டார். உண்மையில், திவ்யப்பிரபந்தம், வேதங்களின் சாரமாகக் கருதப்படுகிறது. ஆகையால்,

ஸ்ரீவைஷ்ணவர்கள், அதைத் திராவிட வேதமென்றும் (தமிழ் வேதமென்றும்), பஞ்சமாகம, அல்லது, ஐந்தாவது வேதமென்றும், போற்றுகின்றனர். அன்னமாச்சார்யாவின் பேரன், தன் தாத்தாவைப் "பஞ்சமாகம ஸார்வபௌம", ஐந்தாம் வேதத்தின் தலைசிறந்த விற்பன்னர், என்றழைப்பது பொருள் செறிந்தது. அன்னமாச்சார்யா சார்ந்திருந்த, பண்டைய காலத்திய வைணவ துதிப்பாடல்களின் மரபைப் பற்றித் தெரிந்து கொள்ள, ஆழ்வார்கள், திருப்பதி ஸ்ரீ வெங்கடேஸ்வரரைப் பற்றிப் பாடிய பாடல்கள், கவிதைகள், ஆகியவற்றின் அறிமுகம், சிறிது தேவை. இவ்வறிமுகம், பெரும் வியப்பைத்தருகிற, திருமாலின் பெருமை என்னும் பொருள் பற்றிப் பாடும்பொழுது, ஒவ்வொரு ஆழ்வாரின் எண்ணப் போக்கு எப்படி இருந்தது, உணர்ச்சிப் பிரதிபலிப்பு எப்படி இருந்தது என்று, ஒப்பு நோக்க உதவும்.

கடவுள் எப்படியோ, அப்படியே பக்தர்களும். திருமால் பக்தர்களின் செயல்களில், உணர்ச்சி மிகுந்திருக்கும். அறிஞர்கள், திருப்பதிக்குன்று பற்றியும், அதிலுள்ள கோயில் பற்றியும் குறிப்பிடும் சுமார் நூற்றுத்தொண்ணூற்றேழுத் துதிப்பாடல்களைத் திவ்யப்பிரபந்தத்தில் கண்டறிந்திருக்கின்றனர். அவற்றில் பல, குன்றின் புனிதத் தன்மையைப் பறைசாற்றுவதோடல்லாமல், அதன் இயற்கை எழிலையும் விவரிக்கின்றன. அவை, ஸ்ரீ வெங்கடேஸ்வரர், பாற்கடலில், சேஷ நாகத்தின் மேல் பள்ளி கொண்டிருக்கும் திருமால் தவிர, வேறொருவரும் அல்லர் என்று கூறுகின்றன. முனிவரும், பாவியும், அவருடைய, எளிதில் நெருங்கக்கூடிய கருணையுருவத்தைக் கொண்டாடிப் போற்றுகின்றனர். ஆழ்வார்களின் பாக்களில், திரும்பத்திரும்பக் காணப்படும் மற்றொரு பொருள், நாயகன்-நாயகி காதல், அதாவது கடவுளுக்கும், பக்தனுக்குமிடையேயுள்ள காதல். இக்காதல் பன்னிரண்டு ஆழ்வார்களில் ஒரே பெண்மணியான ஆண்டாளின் பல பாக்களிலும், மற்ற சில ஆழ்வார்களின் பாக்களிலும், மிக நேர்த்தியாக உருவெடுக்கிறது.

கரும்பின் சாறு எப்படிச் சர்க்கரைக் கட்டியாக உருவெடுக்கிறதோ, அம்மாதிரி, பொங்கிவழியும் ஸ்ரீநிவாஸனின் கருணை, வெங்கடாத்ரிக் குன்றாக உறைந்துபோனது எனப் பொருத்தமாகக் கூறப்பட்டிருக்கிறது.[8] யாத்திரிகர்கள், பாவங்களை அழிக்கும் அதன் வலிமைக்காக, வெங்கடாத்ரிக் குன்றினைத் தொன்று தொட்ட நாட்களிலிருந்து நாடுகின்றனர். யாத்திரிகர்

களின் இந்நம்பிக்கைக்கு, ஆழ்வார்களின் பாடல்களில், பல குறிப்புகள் இருக்கின்றன. உதாரணத்திற்கு, ஆழ்வார்களுள் முதல்வரான, பொய்கை ஆழ்வார் கூறுகிறார்.

*கொழுந்து விட்டெரியும் பாவத்தீயை*
*வேங்கடக் குன்றுதான் அணைக்க முடியும்;*
*செல்வத்தை நாடுவோருடைய பாவத்தையும்,*
*அறிவினால், ஆன்ம ஞானத்தைப் பெற முயலும்,*
*அறிஞர்களுடைய பாவத்தையும்,*
*மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட கடவுள் எவனோ,*
*அவனே, தஞ்சமடையத் தகுதியுள்ள ஒரே கடவுள் என்று,*
*கருதுவோருடைய பாவத்தையும்,*
*வேங்கடக்குன்று தான் போக்கும்;*
*வேங்கடக் குன்று*
*உலகத்தளைகளிலிருந்து விடுபட்ட*
*ஆன்மாக்களின் இதயங்களில்*
*ஒளி பாய்ச்சுகிறது;*
*அவ்வான்மாக்களை விண்ணுலகத்திலிருந்து*
*கீழே இழுக்கின்றது.*

மூன்று விதமான மனிதர்களைப் பற்றி இப்பாடல் கூறுகிறது. உலக இன்பங்களைத் தவிர வேறொன்றிலும் விருப்பமில்லாத, லௌகிகர்களைப் பற்றியும், கடவுள் என்பது மனத்தோற்றம், அவரை அறிவினாலும், ஆராய்ச்சியினாலும், அறிந்து கொள்ள முடியும் என்று நம்புகிற அறிவாளியைப் பற்றியும், அலங்காரங் களை விரும்பும் எந்தத் திருமாலுக்கு வழிபாடு செய்யும் போது மாலைகள் அணிவிக்கப்படுகின்றனவோ, அத்திருமாலைத் தஞ்சம் புக விரும்பும் பக்தனைப் பற்றியும் கூறுகிறது. இந்துப் புராணத்தில் சொல்லப்படும், ஒருவனுடைய விருப்பங்களை நிறைவேற்றுகிற, கற்பகமரம் போல், திருமால் கம்பீரமாக நிற்கிறார். ஒவ்வொரு வருடைய விருப்பங்களைத் திருமால் நிறைவேற்றுமுன், வேங்கடக்குன்று அவர்கள் பாவங்களை அழிக்கின்றது.

திருமழிசை ஆழ்வார், வேங்கடக் குன்றை நினைத்தாலே, ஒருவனுக்கு விண்ணுலகில் இடம் ஒதுக்கப்பட்டுவிடும் என்று கூறுகிறார்.

*குன்று என்ற சொல்லை எப்பொழுதாவது கேட்டவுடன்*
*வேங்கடத்தைப் பற்றித்தான் நான் பாடினேன்;*
*எனக்கு நிலையான ஒரு வீட்டைப் பெற்றேன்;*
*இலக்குமியின் கணவன்*
*என் பக்தி வலையில் மாட்டிக் கொண்டு விட்டான்;*
*நானோ, அவன் காலில் சிக்கிக் கொண்டேன்.*

குன்றைப் பார்க்க வேண்டும் என்ற அடங்கா ஆவல் பற்றி, மற்றொரு பாடலில் அவர் கூறும்பொழுது, குன்றைப் பார்க்க வாய்ப்புக் கிட்டும் நாள் வரும் வரையில், அதனுடைய வரை படத்தை வரைந்து, அதைக் கண்ணுற்று, ஆறுதலடைகிறேன் என்று பாடுகிறார்.

*நான் திருவேங்கடத்தானை,*
*அவருக்குப் பணிவிடை செய்ய அருளும்படி*
*இறைஞ்சுகிறேன்;*
*எந்தக் குன்றில்,*
*மழைநீரால் பெருக்கெடுத்து ஓடும் சிற்றாறுகள்,*
*உயரத்திலிருந்து தாவுகின்றனவோ,*
*இரத்தினங்கள் நிறைந்திருக்கின்றனவோ,*
*அந்தக் குன்றையடைய*
*நான் விரும்புகிறேன்;*
*யானை பயந்து*
*மூர்க்கத்தனமாய் ஓடுகிறது;*
*அதனை மலைப் பாம்பு பிடித்துக் கொள்ளுகிறது;*
*நான் குன்றின் படத்தை*
*மண்ணில் வரைந்து*
*அதை உற்று நோக்குகிறேன்.*

வேங்கடக் குன்றின் மீது தனக்குள்ள பற்று பற்றி, மற்றொரு ஆழ்வார், குலசேகரர், சில பாக்கள் இயற்றியிருக்கிறார். அவைகளில், தான் ஒரு பறவையாகவோ, மீனாகவோ, புதர்ச் செடியாகவோ, மரமாகவோ அல்லது ஒரு கல் துண்டாகவோ, பாஞ்சஜன்யம் என்ற சங்கை, ஒரு கையில் வைத்துக் கொண்டிருக்கும், திருமாலினால் புனிதப்படுத்தப்பட்டிருக்கும் குன்றில் பிறந்தால், உண்மையிலேயே ஆசி வழங்கப்பட்டவன், என்ற அவரது உணர்ச்சி மிக்க விருப்பத்தை, வலியுறுத்துகிறார்.

*நான் மேகங்களின் மீது*
*ஆட்சி செய்ய விரும்பவில்லை;*
*சுவர்க்கத்திலுள்ள*
*கவர்ச்சிமிக்க ஊர்வசியின் ஆதரவுகளை*
*நாடவில்லை;*
*நான், பொன்போல் மினுமினுக்கும்,*
*வேங்கடக்குன்றின் மீது,*
*ஒரு சிறு பொருளாகக் கிடப்பதை*
*விரும்புகிறேன்;*
*அப்பொழுதுதான்,*
*பவளம் போன்ற சிவப்புதடு கொண்ட*
*திருமாலின் அருகிலேயே*
*நான் இருக்க முடியும்.*

நெருங்க முடியாத ஸ்ரீ வெங்கடேஸ்வரர், எளிதில் நெருங்கும்படியான, நேர்த்தியான உருவச்சிலையாகத் திருப்பதிக் குன்றில் நிற்கிறார். அக்குன்றின் பெயரைச் சொன்னவுடனேயே, தெய்வீகக் கவிஞர்கள், ஆனந்தத்தின் எல்லைக்கே செல்கின்றனர். விசிஷ்டாத்வைத சமயக்கோட்பாடின்படி, திருமால், அவருடைய முழு ஆதிக்கத்தினாலும், எளிதில் நெருங்கும்படியான பண் பினாலும், அடையாளம் கண்டு கொள்ளப்படுகிறார்.[10] இராமானுஜர் சொன்னதாகச் சிறப்பித்துக் கூறப்படும் உவமை யொன்று, கடவுளின் இவ்விரண்டு பண்புகள், செயல்படுவதைப் பற்றி விளக்குகிறது. எப்படி, முடவனை ஒரு யானைமீது ஏறச் சொன்னால், அவனால் ஏறமுடியாதோ, அவ்வாறே, இந்தக் குறைபாடுகளுள்ள உலகில், ஒரு அற்ப மனிதன் தானாகவே பரம் பொருளை நெருங்க முடியாது. ஆனால், யானை முட்டிபோட்டு உட்கார்ந்தால், முடவன் யானை மீது ஏற முடியும். அவ்வாறே, கடவுள், ஒரு அவதாரமாகவோ, உருவச்சிலையாகவோ, இப் பூமிக்கு இறங்கி வந்து, பக்தர்களுக்கு எளிதாக நெருங்குபவராக இருக்கிறார். இவ்விரு உருவங்களில், புனிதப்படுத்தப்பட்ட உருவச்சிலையே, அன்பாகப் போற்றப்படுகிறது. ஏனென்றால், அவதாரம், குறுகிய காலகட்டத்தில் ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற் காக எடுக்கப்படுவது. உருவச்சிலையோ, பக்தர்கள் மனதில் நிலையான ஓர் இடத்தைப் பெறுகிறது. அது, கண்ணெதிரே

தெரியும் ஓர் உண்மை. இக்கருத்து, பொய்கை ஆழ்வார் பாடலில், அழகாகச் சித்தரிக்கப்பட்டிருக்கிறது.

*திருமால் பூமிக்கு விடுதலையளித்தான்,*
*குன்றைத் தூக்கிப் பிடித்தான்,*
*நடுநடுங்கும் கம்சனைக் கொன்றான்,*
*முடிவில்லா நீர் நிலையான*
*கடலின் மீது படுத்துறங்குகிறான்;*
*எவனுடைய நிறம்*
*கடலைப்போல் நீலமானதோ,*
*அவன், வேங்கடக்குன்றின் மீது,*
*நிலையாக நிற்கிறான்.*

திருமால், திடீரென வந்த பிரளயத்திலிருந்து பூமியைக் காப்பாற்ற, பன்றி வடிவெடுத்தான். கண்ணனாக, கோவர்த்தனக் குன்றைத் தூக்கிப்பிடித்தான், கம்சனைக் கொன்றான். இந்த அதிசயத்தக்க செயல்களை, திருமால், மேலே கூறிய இரண்டு அவதாரங்கள் எடுத்த காலத்தில் வாழக் கொடுத்துவைத்தவர்களே, கண்டிருக்க முடியும்.

நம்மாழ்வரும், ஸ்ரீ வெங்கடேஸ்வரரை, பத்துப் புகழ் பெற்ற அவதாரங்களில், இரண்டு அவதாரங்களான, கண்ணன், வாமன னாகக் கருதுகிறார். வெங்கடாத்ரிக் குன்று, யாத்திரிகர்களை, எல்லாவித இன்னல்களிலிருந்தும் காக்கும் என உறுதி கூறுகிறார்.

*பசுக்களையும், இடையர்களையும்*
*பெரும் மழையிலிருந்து,*
*ஒரு குன்றைத் தூக்கிக் குடைபிடித்து,*
*ஒரு காலத்தில் காத்த,*
*உலகங்களைத்*
*தன் கால்களால் அளந்த,*
*விண்ணுலகிலிருந்து*
*கீழே இறங்கியுள்ள இறைவன்,*
*குடி கொண்டிருக்கும்,*
*வேங்கடக் குன்றை*
*நாடுவோமானால்,*
*நம்முடைய எல்லா இன்னல்களும்*
*முடிவுறும்.*

ஒரு சமயம், இலக்குமி, தன்னுடைய தெய்வக் கணவனை, சினம் காரணமாக, வைகுண்டத்தில் விட்டு விட்டு, பூவுலகிற்கு வந்து விட்டார் என்று, புராணம் கூறுகிறது. திருமால், மனைவி யைப் பிரிந்த துயரம் தாங்காமல், வைகுண்டத்திலிருந்து இறங்கி, பூமிக்கு வந்து, வேங்கடக்குன்றின் மீது தங்கிவிட்டார். பிறவி யறுத்த, எப்பொழுதும், சுவர்க்கத்திலேயே இருக்கும் ஆன்மாக்கள் கூட, திருமாலைத் தொழ, கீழே இறங்குகின்றனர். ஏனென்றால், திருமால், சுவர்க்கத்தைவிட, இங்கு, எளிதில் நெருங்கக் கூடியவராக இருக்கிறார்.

நம்மாழ்வார், வெங்கடாத்ரித்தலைவனை, கோவர்த்தனக் குன்றைத் தன் சின்ன விரலால் தூக்கிப் பிடித்துப் பசுக்களையும், கோகுலத்தின் எளிமையான குடிமக்களையும் காத்து, அறியாமை யில் மூழ்கியிருந்த இந்திரனுக்குப் பாடம் கற்பித்த இடையர் குல வீரன், தெய்வீக ஒளி பொருந்திய, கண்ணனாகக் கருதுகிறார். கண்ணன், அம்புலியைப் பிடித்துத்தா என்று பிடிவாதம் பிடித்த, அன்புக்குரிய சின்னக் குழந்தையாயுமிருந்தான். பெரியாழ்வார், ஒரு நேர்த்தியான பாடலில், தாயன்புடன் அக்காட்சியைக் காண்கிறார். தன்னை, தெய்வீக இடையன், கண்ணனின் செவிலித் தாயான, வெள்ளையுள்ளம் படைத்த யசோதையாக நினைத்துக் கொண்டு, அவனுடன் விளையாடுவதாகக் கற்பனை செய்கிறார்.

*வட்டவடிவமான, ஒளிமயமான அம்புலியே!*
*எல்லா திசைகளிலும்*
*உன் ஒளியை வீசினாலும்,*
*என் அன்பான குழந்தையின் முகத்துக்கு*
*உன் முகம் ஈடல்ல;*
*வேங்கடத்தில் குடிகொண்டிருக்கும்*
*அழகிய குழந்தை*
*உன்னைக் கூப்பிடுகிறான்;*
*விரைவில் வா!*
*அவன் கை வலிக்கப் போகிறது.*

பெரியாழ்வார், தாயிடம் விளையாட்டுக்காட்டி, அவள், அவனுடைய தலைமயிரில், தொடுத்த மல்லிகைப் பூக்களைச் சூடும்போது, ஓடி ஆடி, எரிச்சலூட்டும், கண்ணனாக, ஸ்ரீ வெங்கடேஸ்வரரைக் கருதுகிறார். பெரியாழ்வாருடைய வளர்ப்பு

மகள், ஆண்டாளோ, ஸ்ரீ வெங்கடேஸ்வரரைத் தன் தெய்வீகக் காதலனாகக் கற்பனை செய்கிறாள். தன் காதலனிடமிருந்து பிரிந்திருக்கும் துன்பத்தை, உணர்ச்சி ததும்பும், பொருத்தமான சொற்றொடர்களுடன் கூடிய, பல காதல் பாக்களில் தெரிவிக்கிறார். தொன்று தொட்டு வரும் பாரம்பரியத்தையொட்டி, மிக உயர்ந்த நிலையிலுள்ள தன் காதலனுக்கு, அவனுடைய நிறத்தையொத்த கருமேகங்கள் மூலம், ஒரு செய்தி அனுப்புகிறார்.

*ஆகாயத்திற்கு*
*நீல விதானம் போல் அமைந்திருக்கும்*
*மேகங்களே!*
*என்னுடைய நாயகனும்*
*உங்களுடன் வந்திருக்கிறாரா?*
*தெளிந்த நீருடைய*
*சிற்றாறுகள் ஓடும் வேங்கடத்தில் வசிப்பவர்,*
*என் முலைகளை நனைக்கும்படி*
*என்னைக் கண்ணீர் சொரியச் செய்வதை,*
*ஒரு வீரச்செயலாக*
*நினைக்கிறாரா?*

எல்லாச் சமய இலக்கியங்களிலும், கடவுளைக் காதலனாகக் கருதும் பாடல்கள் உள்ளன. பக்தனுடைய ஆன்மா, மணமகள், கடவுள் மணமகன். இருவருக்கும் ஏற்படும் சேர்க்கை, ஆன்மீகத் திருமணம், சில பாக்களில், ஆழ்வார்கள், கடவுளிடம் தங்களுக் கிருக்கும் கட்டுக்கடங்கா அன்பைக் காதலாக வெளிப்படுத்து கின்றனர். அக்காதல் பற்றிப் பேசும் பொழுது, திருமணம் என்ற சொல், இருவரின் சேர்க்கையைக் குறிப்பதற்காகச் சங்கேதமாக உபயோகப்படுத்தப்பட்டாலும், இத்திருமணத்திற்கும், சிற்றின்பத் திற்கும், சிறிதும் சம்பந்தமில்லை.

இத்திருமணம், சேர்க்கையின் பேரின்பத்திற்கும், பிரிதலின் துன்பத்திற்கும், எடுத்துக்காட்டாகவிருக்கிறது. மாறி மாறி வரும் இவ்விரண்டு நிலைகள், இறுதி நிலை சேர்க்கையில் ஏற்படும் இன்பத்திற்கு, முந்தைய நிலை. சேர்க்கையின் இன்பத்தில், ஆன்மா, கணநேரம் கடவுளால் கட்டுண்டு, சேர்க்கையையும், இன்பத்தையும் அனுபவிக்கிறது. கடவுளிடமிருந்து பிரியும் பொழுது, ஆன்மா, ஈடு செய்யப்படாத காதலினால், அடங்கா

உணர்ச்சியுடன் தவிக்கிறது. இவ்விரு அனுபவங்களில், முதலாவதில், முடிவில்லாக் காலம், ஒரு கணநேரமாகக் குறுகுகிறது; இரண்டாவது அனுபவத்தில், ஒரு கணம், முடிவில்லாக் காலமாக நீடிக்கிறது. ஞானிகள், இயற்கையாகவே, பிரிவின் துயரத்தைப் பற்றியே அதிகமாகப் பேசுகின்றனர். பிரிவுத்துயரம், அவர்களை, மிக உயர்ந்த நிலையிலுள்ள காதலனைப்பற்றி, எப்பொழுதும், நினைக்க வைக்கிறது. இப்பிரிவுத் துயரம், ஆண்டாளின் காதல் பாடல்கள் பலவற்றில் காணப்படுகிறது.

ஆழ்வார்களின் துதிப்பாடல்களில் மிகுந்து காணப்படும் உணர்ச்சி, பக்தியும், தஞ்சம் புகுதலும். கடவுளிடம் பக்தி செய்து, தஞ்சம் புகுவதுதான், எல்லோரும் சுலபமாகப் பின்பற்றக் கூடிய, நிலையான ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடிய முறை. நம்மாழ்வார், தனக்குப் பக்தியிலும், தஞ்சம் புகுதலிலுமிருக்கும் முழு நம்பிக்கை பற்றி, மிக்க சொல்வன்மையுடன் ஒரு புகழ் பெற்ற பாடலில் பாடுகிறார்.

*ஒரு கணநேரப் பிரிவுத்துன்பத்தை*
*தாங்க முடியாத,*
*தாமரை மீது வீற்றிருக்கும்,*
*இலக்குமிக் கடவுள்,*
*நின் மார்பில்*
*எப்பொழுதும் வீற்றிருக்கிறாள்;*
*ஈடற்ற பெருமையுடைய*
*என் தலைவனே!*
*மூவுலகங்களைக் காப்போனே!*
*என்னைக் காப்போனே!*
*பிறப்பு, இறப்பற்ற*
*கடவுள்களாலும்,*
*முனிவர்களாலும்,*
*வேங்கடக் குன்றின் மீது*
*தேடப்படுகிறாய்;*
*வேறு ஆதரவில்லாமல்*
*உன் பாதங்களின் மீது*
*என் பார்வையைச் செலுத்துகிறேன்;*
*அப்பாதங்களின் நிழலில்*
*தங்க இடங் கண்டேன்.*

உயர்ந்த, நெகிழவைக்கும் உணர்ச்சிகளைக் கொண்ட, சிறந்த வைணவ வேதாந்த விரிவுரையாளர்களால், விரிவாக விளக்கம் செய்யப்பட்டிருக்கும், ஆழ்வார்களின் பாடல்களை, அன்னமாச்சார்யா நன்றாகவே அறிந்திருந்தார். ஏனென்றால், அவர் திவ்யப்பிரபந்தத்தை மிகக் கவனத்துடன் படித்திருந்தார். அவர், வாழ்நாள் முழுதும் தொடர்பு வைத்திருந்த திருப்பதிக் கோயிலில், திவ்யப்பிரபந்தத்திலிருந்து நாள்தோறும், துதிப்பாடல்கள் பாடப்படுவதைக் கேட்டிருக்கிறார்.

அவர், உண்மையிலேயே இறைவனுடைய ஆஸ்தானக் கவிஞர். இறைவனாகிற தன் எசமானனுக்கு, நாள்தோறும் ஒரு புகழ்ச்சிப் பாடலாவது அர்ப்பணிக்க வேண்டியது தன் கடமையென்று கருதினார். பாடலை இயற்றியவர், எவ்வளவு ஆவலுடன், ஒவ்வொரு நாளும் அதைப் பாடக் காத்திருப்பாரோ அவ்வளவு ஆவலுடன், ஸ்ரீ வெங்கடேஸ்வரர், அதைக் கேட்கக் காத்திருப்பார் என்று சொல்லப்படுகிறது. பக்திமானான கவிஞன், இறைவனைத்தவிர, வேறு ஒருவரும் இல்லை என்ற நிலையிலும், இறைவன், தன் பக்தனை அன்பு மிகுதியால் காக்க வேண்டு மென்ற நிலையிலும், ஒருவரையொருவர் சார்ந்திருந்தனர். இந் நிலையைப்பற்றி, அன்னமாச்சார்யா பாடும்பொழுது இவ்வாறு கூறுகிறார்:

*அடியேன் இல்லையேல்*
*எவர்மீது உன் அன்பைப் பொழிவாய்?*
*என்னால்தான், நீ,*
*உன் அன்பிற்குச்*
*சிறப்புப் பெற்றாய்!*

*அறிவிலிகளிலெல்லாம்*
*அறிவிலியாக*
*என்னைக் கண்டாய்!*
*வளர்ந்து கொண்டுபோகும்*
*வலிமைமிக்க இறுமாப்பு மலையாய்*
*என்னைக் கண்டாய்!*
*அளவு கடந்து,*
*இந்திரிய இன்பங்களை நாடுபவனாக*

*என்னைக் கண்டாய்!*
*என்னைப் போன்ற ஒருவனை*
*நீ எவ்வாறு கைவிட முடியும்?*

*உண்மையில்,*
*லௌகிகம் தழைத்தோங்கும் நாட்டின்*
*தலைவன் நான்!*
*முடிவில்லாமல் சுற்றும்*
*பிறப்புச் சக்கரத்தில் கட்டுண்டு கிடக்கும் நான்,*
*தீய செயல்களுக்குப்*
*பெயர் பெற்றவன்;*
*எனக்கு ஈடாக*
*யாரை நீ காண முடியும்?*

*உதவாக்கறையான என்னை*
*நீ காப்பாற்றினால் தான்,*
*உன் கருணை,*
*பெருமையோடு பேசப்படும்;*
*என்னால் தான்*
*உனக்குப் பெருமை;*
*உன்னிடமிருந்து நான் சக்தி பெறுகிறேன்;*
*ஏ வெங்கடேசா!*
*நாமிருவரும்*
*ஒருவரிடமிருந்தொருவர்*
*பயனடைகிறோம்.*

பாகவத புராணத்தில் கூறப்பட்டிருக்கும் ஒன்பது வகையான பக்தி செய்யும் முறைகளில், நட்பு செய்யும் முறையும் ஒன்று. மேற்கண்ட, துதிப்பாடலின் எண்ணம், அதை வெளியிடும் முறையிலிருந்து, அன்னமாச்சார்யா, கடவுளை உரிமையுடன் அழைக்கக் கூடிய, மிக வளர்ச்சியடைந்த ஆன்மாக்களின் குழுவைச் சேர்ந்தவர் என்று புலனாகிறது. சில சமயங்களில், அவர் குழுவைச் சேர்ந்தவர்கள், அவரைத் தங்களுடைய மிக்க அன்பான நண்பனாகக் கருதுகின்றனர்.

## 2. அதிசய நிகழ்ச்சிகள் நிறைந்த வாழ்க்கை

முனிவர்கள் வாழ்க்கை பற்றிய பலரும் அறிந்த வருணனைகளில், கற்பனைகள், உண்மைகளில் தாராளமாகக் கலக்கின்றன. சாதாரண, இயற்கையாக நடக்கும் சம்பவங்களை, ஆச்சரியப்படும்படியான, அதிசயங்களாகக் கற்பனை செய்து காட்டுவதால், அநேகமாக, அவைகள், விவேகத்தின் சோதனைக்குக் கட்டுப்படுவதில்லை. ஆனால், உண்மையை, இதயத்தாலும் புரிந்து கொள்ள முடியும், புத்தியாலும் புரிந்து கொள்ள முடியும். இதய இரகசியங்களின் காரணத்தை, இதயந்தான் அறியும். அதை விவாதித்து அறிய முடியாதென்று நன்றாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மக்கள் ஒருவரைப் பாராட்டி, அவருக்கு அளவு கடந்த மரியாதை கொடுப்பதாலேயே, அவர் மிக உயர்ந்த நிலையை அடைந்து, அவரைச் சுற்றி, ஒரு ஒளிவட்டம் தோன்றுவதில்லை. ஒருவர் முனிவராயிருப்பதாலேயே, அவரைச் சுற்றிப்பல வரலாறுகள் தோன்றுகின்றன. முனிவர், சாதாரண மனிதன் அல்ல. இறை சக்தி அவரிடம் அதிகமாக நிறைந்திருப்பதால், அவருடைய கருணைப் பார்வை யார் மீது விழுகிறதோ, அவனுடைய துன்பங்கள், தவிடு பொடியாகிவிடும். அவருடைய மன வேதனையை, இருளுக்கப்பால் ஒளிப்பிழம்பாய்த் திகழும், கடவுளிடம் கூறினால், அவருக்குக் கடவுளிடமிருந்து மறுமொழி கிடைக்கிறது. அவரது இந்நிலை, தெய்வீகச் சக்தியில் நமக்குள்ள அவநம்பிக்கையை, ஓரளவு கைவிட வேண்டியவர்களாக இருக்கிறோம் என்பதைக் காட்டுகிறது.

சின்னண்ணா என்று பலராலும் அழைக்கப்படும், அன்னமாச்சார்யாவின் பேரன் சின்ன திருவேங்களநாதா, தெய்வீகக் கவிஞரான, தன் தாத்தாவைப் பற்றித் தெலுங்கில் எழுதிய, முதல் வரலாற்றுக் காவியமான "அன்னமாச்சார்யா சரித்ரமு" என்ற நூலில், அதிசய நிகழ்ச்சிகள் சிலவற்றைப் பற்றிய வருணனைகள் இருப்பதில் ஆச்சரியமொன்றுமில்லை. அது சரித்திர முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுவதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. சின்னண்ணா, தன் தாத்தாவின் வாழ்க்கையில் நடந்த சம்பவங்கள் பற்றிய செய்தியை, தன் குடும்ப உறுப்பினர்களிடமிருந்தே திரட்டினார். தாத்தா, உயிருடனிருந்த பொழுது, அவரை

அறிந்தவர்கள் வாழ்ந்த காலத்திலேயே, காவியத்தை இயற்றினார். அவர்களுடைய மறைமுகமான ஒப்புதலையும், அது பெற்றது. அதில், உண்மைகள் பக்தி முலாம் பூசப்பட்டு, மிகைப்படுத்திச் சொல்லப்பட்டாலும், அவைகளை, சின்னண்ணா காலத்தவர்கள் சந்தேகிக்கவில்லை.

அன்னமாச்சார்யா, நந்தவரீகப் பிரிவு அந்தணர் குடும்பத்தைச் சார்ந்த பெற்றோர்களுக்கு, திருப்பதிக்கருகேயுள்ள சந்தடியில்லாக் குக்கிராமமான தாள்ளபாக்கத்தில், பதினைந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியில், ஆயிரத்து நானூற்று எட்டில், அநேகமாக, மே மாதம் இருபத்திரண்டாம் தேதி பிறந்தார். அவருடைய முன்னோர்கள் "தாள்ளபாக்கா" என்ற குடும்பப் பெயரைப் பெற்றனர். அவர்கள் தாள்ளபாக்கத்தில் பலகாலம் வாழ்ந்ததால், அவ்வாறு அழைக்கப்பட்டனர். சைவ சமயத் துறவிகளான நவநாத ஸித்தர்கள் என்று அழைக்கப்பட்ட ஒன்பது பேர், மட்டமான உலோகங்களைத் தங்கமாக மாற்றும் இரசாயனப் பரிசோதனையை அங்கு நடத்தி வெற்றியடைந்தனர் எனக் கூறப்படுகிறது.

அன்னமாச்சார்யாவின் பெற்றோர்கள் நாராயண சூரியும், இலக்கமாம்பாவும், சிவன், திருமால் இருவரையும் வணங்கும் ஸ்மார்த்த மதப்பிரிவைச் சேர்ந்தவர்களாயிருந்தாலும், திருமாலின் தீவிர பக்தர்களாயிருந்தனர். அவர்களுடைய, இலக்குமி, நாராயணா என்ற பெயர்களே, அவர்கள் முன்னோர்கள், திருமாலிடம் மிக்க பக்தி செலுத்தியவர்கள் என்பதை நுட்பமாகத் தெரிவிக்கிறது. அன்னமாச்சார்யா குடும்பம், திருமாலிடம் பக்தி கொண்டிருந்த தற்கு, ஒரு காரணம் உண்டு. தாள்ளபாக்கா கிராமத்தில், சென்ன கேசவா என்றழைக்கப்படும் கண்ணனுடைய பழைய கோயில் ஒன்று இருந்தது. இக்கோயிலுடன், பல தலைமுறைகளாக, அன்னமாச்சார்யா குடும்பத்தினர், தொடர்பு கொண்டிருந்ததாகத் தெரிகிறது.

அன்னமாச்சார்யாவின் பெற்றோர்கள், தங்களுக்கு ஆண் குழந்தை பிறக்க வேண்டுமென்ற அவாவுடன், வேங்கடக்குன்றின் மீதுள்ள ஸ்ரீ வெங்கடேஸ்வரர் கோயிலுக்கு, யாத்திரை சென்றனர். அங்கு, அவர்கள், ஒரு அசாதாரணமான அனுபவத்தைப் பெற்றனர். கோயில் சுற்றுப்புறத்தை வலம் வரும்பொழுது, அவர்கள், தங்கள் மனக்கண்ணில், திருமாலின் ஐந்து முக்கிய ஆயுதங்களில்

ஒன்றான நந்தகக்கத்தியைக் கண்ணுற்றனர்.[11] சில காலத்தில், அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி, அவர்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது.

அன்னமாச்சார்யாவின் பெற்றோர்கள் கண்ட, மறை பொருளுள்ள அகக்கண்காட்சி, அன்னமாச்சார்யாவின் பிறப்பு, வைகுண்டத்தில், திருமாலுக்குப் பணிவிடை செய்பவர்களும், அவருடைய ஆயுதங்களுமே, முனிவர்களாய்ப் பிறக்கின்றனர் என்ற வைணவர்களுடைய பாரம்பரிய நம்பிக்கைக்கொப்ப விருந்தது. பெரியாழ்வார், கருடனுடைய அவதாரமாகக் கருதப் படுகிறார். பொய்கையாழ்வார், பாஞ்சஜன்யம் என்ற சங்கின் அவதாரமாகக் கருதப்படுகிறார். பேயாழ்வாரும், நந்தகக்கத்தியின் அவதாரம்தான். அன்னமாச்சார்யா, அவருக்கு முன் வாழ்ந்த, நம்மாழ்வார் போல், வைகாசி மாதத்தில், விசாக நக்ஷத்திரத்தில் பிறந்தார். இருவரும் பதினாறு வயதில் ஆன்மவிளக்கம் பெற்றனர்.

மகிழ்ச்சியடைந்த அன்னமாச்சார்யாவின் பெற்றோர்கள், ‘அன்னமய்யா’ என்ற பெயரைக் குழந்தைக்குத் தெரிந்தெடுத்தனர். சின்னண்ணா, குழந்தைக்கு, திருமாலைக் குறிக்கும் பெயரே சூட்டப்பட்டது எனத் தெளிவாகக் கூறுகிறார். அறிஞர்கள், ‘அன்னம் ப்ரம்ஹேதி வ்யஜானாத்’ என்ற வேத சூத்திரத்தை மேற்கோள் காட்டி, சின்னண்ணாவின் கூற்றை விளக்குகின்றனர். ‘அன்னம்’, அல்லது, சோறு என்பது, கடவுள் என்று இச்சூத்திரம் சுட்டிக் காட்டுகிறது. ‘அன்னம்’ கடவுளைக் குறிக்கும் சொல் என்பதற்கு மற்றொரு எளிய விளக்கமுள்ளது. ‘அன்னம்’ என்ற சொல், மஹாபாரதப் புராணத்தில், ஆனுசாஸன பர்வத்தில் காணப்படும், மிகச் சிறப்பெய்திய, விஷ்ணு ஸஹஸ்ரநாம தோத்திரத்தில், திருமாலின் ஆயிரம் நாமாக்களில் ஒன்றாகச் சொல்லப்படுகிறது. ஆயிரம் நாமாக்களைச் சொல்லியே, பல திருமால் கோயில்களில் அருச்சனை செய்யப்படுகிறது. இம்மையிலும், மறுமையிலும், இன்பமளிக்க மிக்க வல்லமை படைத்த, சுபமான மந்திரமாகக் கருதி, இத்தோத்திரத்தை, நாடு முழுதுமுள்ள பக்திமான்கள் சொல்கின்றனர். இத்தோத்திரத்திற்கு விளக்கவுரை எழுதிய சங்கரர், திருமால், உண்பவன், உண்ணப்படுவது, என்ற இரு பொருள்களிலும், அன்னமாக இருக்கிறார் என்று கூறுகிறார். ஞானமுற்றோருக்குத் திருமால் உண்ணுவதற்குப் பொருள். திருமால், பிரளயத்தின் பொழுது,

உலகங்களை விழுங்குகிறார். பராசரபட்டர், இதே சொல்லை, 'பகவத்குணதர்ப்பண' என்று பெயரிடப்பட்ட தனது உரைநூலில், விசிஷ்டாத்வைத சமயப் பிரிவின் கண்ணோட்டத்திலிருந்து விளக்குகிறார். திருமாலின் சிறப்புப் பண்புகளில் ஒன்று, அமுதைப் போல் தித்திக்கும் தன்மை. அத்தகைய திருமால், பக்திமான்கள், தன்னைச் சுவைக்க அனுமதிக்கிறார் எனக் கூறுகிறார். மத்வ சமய பாரம்பரியத்தையொட்டி, ஸத்ய ஸந்த தீர்த்தயதியால் எழுதப்பட்ட விளக்கவுரை, சங்கரரைப்போல், ''அத்யதே அத்தி ச'', என்று, அதே புராணப் பகுதியை மேற்கோள்காட்டி, உண்ணப்படுபவனும், உண்பவனும் ஒருவனே என விளக்குகிறார். திருமால், அறிஞர்களுக்கும், பக்தர்களுக்கும், ஆன்மீக ஊட்டமளிப்பவன். ஆகையால், திருமால், 'அன்னம்' என்று அழைக்கப்படுகிறார்.

சிறுவன் அன்னமய்யா, படிப்பில் சிறந்து விளங்கியதாகத் தெரிகிறது. சிறு வயதிலேயே, அன்னமய்யா, மரபு வழிக்கல்வியில் தக்கபோதனை பெற்றதற்கு, அவர் பாக்கள் நல்ல சான்றுகளாக அமைகின்றன. சிறுவன், சென்னகேசவா கோயிலுக்கு அடிக்கடி செல்லும் விருப்பமுடையவனாயிருந்தான். கண்ணன் முன்பு பாடி, நாட்டியம் ஆடுவான். அவரை அன்புச் சொற்களால் அழைப்பான். அச்சிறிய வயதிலும் கூட, அவன் தற்செயலாகக் கூறும் சொற்கள், இலக்கியச் செறிவுடனிருக்கும். அவனுடைய பாக்கள், ஒரு இறைவா இசைமேதையின் செய்திகளைத் தாங்கி வந்தன.

எட்டு வயதாயிருக்கும் பொழுதே, உலக வாழ்க்கை அவனுக்கு வெறுத்து விட்டது. சிறியதாய்த் தெரியும் ஒரு நிகழ்ச்சி, அவனுக்கு உலகத்தின் மீது வெறுப்பை ஏற்படுத்தியது. அந்நிகழ்ச்சி, அவனை, உலக வாழ்வில் சோர்வடைந்த ஆன்மாக் களுக்குத் தவறாது உதவி செய்யும் நண்பன், கருணையே, உருவான திருமாலை, உடனே நாடத்தூண்டியது. பாடுவதில் அவனுக்கிருந்த அளவுகடந்த ஈடுபாடு காரணமாக, அவன் வீட்டு வேலைகளைச் சரிவரச் செய்யாததால், அண்ணன் மனைவியால், கடிந்து கொள்ளப்பட்டான், இழிவாக நடத்தப்பட்டான். ஒரு நாள் மாலை, பெற்றோர்களாலும், அண்ணன் மனைவியாலும், கால்நடை மேய்ப்பு நிலத்திற்குச் சென்று, கால்நடைகளுக்குப் புல் கொண்டு வரும்படி ஆணையிடப்பட்டான். அவன், ஒரு அரிவாளை எடுத்துக் கொண்டு, புல் வெட்டுவதற்குப் புறப்பட்டான். புல் வெட்டும்பொழுது, தற்செயலாக, சிறு விரலை

வெட்டிக் கொண்டுவிட்டான். விரலிலிருந்து இரத்தத் துளிகள் கசிந்தன. இக்காட்சி, அவன் மனதில், வெறுப்பையும், சினத்தையும் உண்டாக்கியது. தன் நிலைக்குக் காரணம், தன்னை ஆணையிட்டவர்கள்தானே என அவர்களைக் குற்றம் சாட்டினான். காயத்தால் ஏற்பட்ட வலியைப் பொறுத்துக் கொள்ளலாம், ஆனால், அவனது அண்ணன் மனைவியின் நாவிலிருந்து கொட்டும் கொடிய வார்த்தைகள் பொறுக்க முடியாதவை என்று நினைத்தான். ஆகையால், குடும்ப உறவை அறுத்துக் கொண்டு, வீட்டிலிருந்து வெளியேற முடிவு செய்தான். அப்பொழுது, ஸ்ரீ வெங்கடேஸ்வரர் கோயிலுக்கு மகிழ்ச்சியுடன் செல்லும் ஒரு யாத்திரிகர் குழு, அவன் கண்ணில் தென்பட்டது. அவன் கண்ட காட்சி, அவன் எங்கு செல்லவேண்டுமென்ற இடத்தை முடிவு செய்தது. பக்க வாத்திய இசைக்கருவிகள் இசைக்க, யாத்திரிகர்கள் பக்திப் பாடல்களைப் பாடிக் கொண்டும், உணர்ச்சி பொங்க நாட்டியமாடிக் கொண்டுமிருந்தனர். நடுநடுவே, அவர்கள் மிக்க ஆனந்தத் துடன், 'ஹரி', 'கோவிந்தா' என கூக்குரலிட்டனர். இக்காட்சி, சிறுவனைக் கவர்ந்தது. அவன், அவர்களுடன் திருப்பதிக்குப் புறப்பட்டான்.

அக்காலத்தில், ஸ்ரீ வெங்கடேஸ்வரர் கோயிலுக்கு, ஏழு குன்றுகளைக் கால்நடையாக நடந்து கடக்க வேண்டும். ஒருநாள் அதிகாலை, யாத்திரிகர்கள், குன்றுகளின் உச்சிக்கு அழைத்துச் செல்லும் படிக்கட்டுகள் மீது ஏற ஆரம்பித்தனர். சிறுவனாகிய அன்னமய்யா, காலையிலிருந்து உணவு ஒன்றும் உட்கொள்ளாத தால், சிறிது நேரம் நடந்ததும் களைப்புற்றான். யாத்திரிகர்கள் குழுவுடன் செல்ல முடியாமல், பின்தங்கிவிட்டான். களைப்பு மிகுதியாலும், பசியினாலும், ஒரு பாறையின் மேல் படுத்து, விரைவிலேயே உறங்கிவிட்டான். பிறகு, ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் தெய்வத் துணைவியார், பத்மாவதி தேவி, வயது முதிர்ந்த மாது போல், சிறுவன் முன் தோன்றி, மிக்க அன்புடன், அவனிடம் பேசினார் என்று சின்னண்ணா கூறுகிறார்.

அன்னமய்யா, கண்களைத் திறந்தவுடன், தான் ஒன்றையும் பார்க்க முடியவில்லையேயென்று, பரிதாபமாக அழுதான். பத்மாவதித் தாயார் வேங்கடக்குன்று, சாலக்ராமக் கற்களாலான தென்றும், அதன் மீது காலணிகளுடன் நடப்பது தெய்வ

நிந்தனையென்றும் கூறினார். தெய்வத்தாயின் சொற்களைக் கேட்டவுடன், தன் காலணிகளைக் கழட்டி எறிந்தான். உடனே, அவன் கண்கள் ஒளிபெற்று, அவனால் பார்க்க முடிந்தது. பத்மாவதித் தாயார், திருமாலுக்குப் படைக்கப்பட்ட புனிதமான உணவை, அவனுக்கு ஊட்டிவிட்டு, வெங்கடாத்ரிக் குன்றின் உச்சியிலிருக்கும் கோயிலுக்கு வழிகாட்டிவிட்டு, மறைந்து விட்டார்.

தான் கண்ட காட்சியை நினைத்துச் சிறுவன் ஆச்சரியத்தில் மூழ்கிப்போனான். உணர்ச்சிப் பெருக்கில், நூறு பாக்கள் கொண்ட, "ஸ்ரீ வெங்கடேஸ்வர சதகமு" என்ற சிறு காவியத்தை இயற்றினான். அது, திருமாலை விளிப்பது போலிருந்தாலும், உண்மையில், தெய்வ அன்னை பத்மாவதியின் கருணையைப் புகழந்து பாடுகிறது.

சின்னண்ணாவால், சற்று விரிவாக விவரிக்கப்பட்டிருக்கும் இந்நிகழ்ச்சி, இலக்குமி, தன் தவறை உணர்ந்து திருந்தும் பக்தனுக்கும், ஈடு இணையில்லா பெருமையுடைய திருமாலுக்கு மிடையே, நடுவராயிருக்கிறார் என்ற விசிஷ்டாத்வைதக் கொள் கையை விளக்குவதாய் இருக்கிறது. கருணையே வடிவாயிருக்கிற இலக்குமி, திருந்திய ஆன்மாக்களுக்காகத் திருமாலிடம் வாதாடி, பரிந்து பேசுகிறார். சதுஸ்லோகியில், யமுனாச்சார்யாதான், முதலில் இலக்குமியின் இப்பண்பு பற்றி குறிப்பிடுகிறார். இராமானுஜரின் சரணாகதிகத்யாவில், இலக்குமியின் இப்பண்பு பற்றிய கருத்து, மனமுருக்கும் வகையிலும், நினைவில் நிற்கும்படியும், இடம் பெறுகிறது. இராமானுஜர் காலத்திற்குப் பிறகு இயற்றப்பட்ட துதிப்பாடல்களான, ஸ்ரீவத்ஸாங்கமிஸ்ரரின் ஸ்ரீ ஸ்தவம், பராசரபட்டரின் ஸ்ரீ குணரத்னகோசா, வேதாந்த தேசிகரின் ஸ்ரீ ஸ்துதி முதலியவை, உலகிலுள்ள ஆதரவற்ற மக்களின் மீது பத்மாவதித் தாயாருக்கு இருக்கும் கருணை பற்றி விரிவாகக் கூறுகின்றன. தெய்வத் தாயான இலக்குமி, பக்தனுக்கும், திருமாலுக்குமிடையே நடுவராய் விளங்கும் காரணத்தை யொட்டியே, விசிஷ்டாத்வைத சமயம், ஸ்ரீவைஷ்ணவம் என்று பெயர் பெற்றது. மேலும், விசிஷ்டாத்வைத சமயப்பிரிவில், நன்கு வரையறுக்கப்பட்டிருக்கிற ஆசான்கள் வரிசையில், இலக்குமி, முதல் ஆசானாக, திருமாலையடைவதற்கு வழிகாட்டுகிறார்.

இலக்குமி, முழுதாக மலர்ந்த தாமரை மலரின் மீதமர்ந்து, தன் தெய்வக் கணவனான திருமால் மார்பில் வீற்றிருப்பதாக வருணிக்கப்படுகிறார். இலக்குமி, தன் கணவனின் இதயத்தில் எப்பொழுதும் வீற்றிருக்கிறாள் என்பதை, இந்த வருணனை சங்கேதமாகத் தெரிவிக்கிறது. அவள், கணவனின் இதயத்தில் வீற்று, அவருடைய இதயத்தை மென்மையாக்கி, குற்றம் புரியும் பக்தர் களிடம் கருணைகாட்டும்படி தூண்டுகிறாள். ஸ்ரீ வெங்கடேஸ்வரருடைய மனைவி பத்மாவதி (தாமரை வைத்திருக்கும் மகளிர்) இலக்குமியின் அவதாரம். தென்னகத்தே, இலக்குமியை, அவருடைய தமிழ்ப்பெயரான 'அலர்மேல்மங்கை' (மலர் மேல் உட்கார்ந்திருக்கும் இளம் நங்கை) என்ற பெயரால் அழைக்கின்றனர்.

உடலுக்கும், ஆன்மாவுக்கும், தெய்வத்தாயிடமிருந்தே ஊட்டம் பெற்ற அன்னமய்யா, மீதமிருந்த படிகளை எளிதாக ஏறி, வேங்கடக் குன்றின் உச்சியை அடைய முடிந்தது. வேங்கடக்குன்றின் மீதுள்ள புகழ் பெற்ற கோயில்குளம், ஸ்வாமி புஷ்கரிணியில் நீராடி, அருகேயுள்ள பல புனித இடங்களையும் பார்வையிட்ட பிறகு, ஸ்ரீ வெங்கடேஸ்வரர் கோயிலுக்குச் சென்று, மூலஸ்தானத்திலுள்ள, திருமாலின் அழகிய உருவச் சிலையைக் கண்ணுற்றான். தன்னுடைய அனுபவத்தை ஒரு பாவில் வடித்துக் கொடுக்கிறான்:

*கண்டேன், அடியேன்,*
*நிகரற்ற உலகத்தலைவனை;*
*புனித முற்றேன்.*

*பாவங்களைக் கழுவுகிற,*
*அருவிகளையும்,*
*மற்ற புனித இடங்களையும்,*
*அறிஞர்கள் பாடிப் புகழும்,*
*புனிதக் குன்றையும்,*
*கண்ணுற்றேன்.*

*படமெடுக்கும் பாம்புகளின் தலைகளிலுள்ள*
*இரத்தினங்கள் போல்,*
*மிளிரும் குன்றைக்*
*கண்ணுற்றேன்.*

*நேர்த்தியான கூடாரங்களையும்,*
*ஒன்பது இரத்தினங்களிலிருந்து*
*ஒளிபொழியும்*
*தங்கப் பலிபீடங்களையும்*
*வானளாவிய, ஜொலிக்கும் கோபுரங்களையும்*
*கண்ணுற்றேன்.*

*ஞானிகள்,*
*தங்களுடைய அகக்கண்ணில்,*
*எந்த இணையற்ற*
*தாமரைப் பாதங்களைப்*
*பிடித்துக் கொள்கிறார்களோ,*
*அவைகளைக் கண்ணுற்றேன்;*
*எந்தத் தெய்வீகக் கை*
*நிலையாக நிற்கின்ற குன்றைச்*
*சுட்டிக்காட்டுகிறதோ,*
*அதைக் கண்ணுற்றேன்.*

*அடியேன்*
*வேங்கடக்குன்றின் தலைவனைக்*
*கண்ணுற்றேன்;*
*புனிதமுற்றேன்.*

பிற்காலத்தில், ஸ்ரீ வெங்கடேஸ்வரின் தன் கருணையும் உருவத்தைப் பார்த்த ஆனந்தத்தை அனேகமாக எல்லாப் பாக்களிலும் வடித்திருக்கிறார். 'சிந்தனை மிக்க பெரியோர்களின் விழுமிய சென்ற பொக்கிஷம்', 'ஒருவனுடைய தாகவேட்கையைத் தீர்க்கும் கரிய மேகம்', 'இச்சையை நிறைவேற்றும் விலையுயர்ந்த இரத்தினம், சிந்தாமணி', 'எல்லா உலக இன்னல்களுக்கும் தவறாது பலனளிக்கும் சஞ்சீவி' என்றெல்லாம், ஸ்ரீ வெங்கடேஸ்வரரை, அவர் வருணிக்கிறார். அசையாக் குன்றின் மீது நிலையாக நிற்கும் தன் பாதங்களைக் காட்டி, தஞ்சம் புகும் கொள்கையை விளக்குகிற திருமாலுடைய வலது கை நிலையின் சிறப்பு பற்றி, சிறு வயதிலேயே அவர் அறிந்திருந்ததை, ஆரம்ப காலத்தில் இயற்றப் பட்ட இப்பாடலில் தெளிவாகக் காட்டுகிறார்.

அன்னமய்யா, முதல் தடவை குன்றிற்கு வந்து அங்கு தங்கியபொழுது, பல அதிசய நிகழ்ச்சிகள் நிகழ்ந்ததாகச் சொல்லப்படுகின்றன. அவன், குன்றில் தங்கிய இரண்டாம் நாள் ஏகாதசி. திருமாலை வழிபட மிக்க உகந்த நாள். அன்று, சிறுவன், புனிதக்குளத்தில் நீராடினான். அவனுடைய ஆடைகள் உலர்ந்துகொண்டிருந்தபொழுது, ஸ்ரீ வெங்கடேஸ்வரரைப்பற்றி நூறு பாடல்கள் இயற்றினான். அவன் கோயிலுக்கு வந்தவுடன் கோயில் கதவுகள் சாத்தப்பட்டிருந்தன. அப்பொழுது, தான் இயற்றிய பாடல்களைப் பாடினான். அதிசயத்தக்க வகையில், கதவுகள் திறந்து, அவன் கோயிலுக்குள் செல்ல வழிவிட்டன.[12] அவன், பாக்களைப்பாடி முடித்தவுடன், கடவுளின் கழுத்தில் போடப்பட்டிருந்த முத்துமாலையொன்று, நழுவி விழுந்தது, கடவுளுக்குப் பாக்களால் ஏற்பட்ட மகிழ்ச்சியைத் தெரிவிப்பது போலிருந்தது. இந்த அதிசயங்களைப் பார்த்த வைகானஸ அர்ச்சகர், ஆச்சரியத்தில் மூழ்கிப்போய், சிறுவனுடைய ஆழ்ந்த தெய்வ பக்தியைப் பாராட்டினார்.

சில காலத்திற்குப் பிறகு, ஸ்ரீ வெங்கடேஸ்வரர், கணவிஷ்ணு என்ற வைணவத் துறவியின் கனவில் தோன்றி, கருநிறம் கொண்ட அன்னமய்யா, என்ற சிறுவனைத் தேடி, அவனை வைணவ சமயத்தில் சேர்த்துக் கொள்ளக் கட்டளையிட்டு, அதற்குண்டான புனிதச் சடங்குகளையும் செய்யச் சொன்னார்.[13] ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் கட்டளை, அன்னமய்யாவிடம் தெரிவிக்கப்பட்டபொழுது, அவன் மகிழ்ச்சியடைந்தான். காலதாமதமில்லாமல், அவன் வைணவ சமயத்தைத் தழுவினான். தன் குடும்பத்தில், விசிஷ்டாத்வைத சமயப் பிரிவைத் தழுவிய, முதல் உறுப்பினன் ஆனான். வைணவ சமயத்தைச் சேர்ந்ததால், 'ஆச்சார்யா' (விரிவுரையாளர், குறிப்பாக, வேதங்களின் விரிவுரையாளர்) என்ற பட்டப் பெயரைப் பெற்று, அன்னமாச்சார்யா என்று அழைக்கப்பட்டான்.

கோயிலில் குழுமிய யாத்திரிகர்கள் முன்னிலையில், இனிமையாகப் பக்திப் பாடல்களைப் பாடிக் கொண்டும்,

*"வெயிலோ, நிழலோ*
*எதுவாயிருந்தாலும் சரி,*
*குன்றின் தலைவனே*
*எங்களின் ஒரே புகலிடம்"*

என்று சந்தேகமற அறைகூவும், ஸ்ரீவைணவத்தின் அடிப்படைக் கொள்கைளைக் கற்றுக் கொண்டும், நாட்களைக் கழித்தான். ஒரு நாள், அவன் தாய், திருப்பதியில், எப்படியோ, அவனைக் கண்டுபிடித்தாள். அன்னமய்யாவிடம், ஆன்மீக நடவடிக்கை களைத் தொடர, அவனுக்கு வீட்டிலேயே, முழு உரிமை கொடுக்கப்படும் என்று கூறி, அவனை வீட்டுக்குத் திரும்பி வரச் சம்மதிக்க வைத்தாள்.

அடுத்த எட்டு ஆண்டுகளில், அன்னமாச்சார்யா, ஆன்மீக விஷயங்களில் தீவிரமாக ஈடுபட்டிருக்கவேண்டும். ஏனென்றால், திருப்பதிக் கோயிலின் எல்லைக்குட்பட்ட பகுதியில் கிடைத்த, செப்பேடொன்றை ஆதாரமாகக் கொண்டு பார்த்தால், அவர் பதினாறு வயதடைந்தபொழுது, அவருக்கு, ஸ்ரீ வெங்கடேஸ்வரர் காட்சியளித்தார் என்று பொதுவாக நம்பப்படுகிறது. அந்நாளி லிருந்துதான், அன்னமய்யா, ஸ்ரீ வெங்கடேஸ்வரர் மீது, பக்திப் பாடல்கள் இயற்றத் தொடங்கினார் என்றும், இறுதி நாட்கள் வரை அவ்வழக்கத்தைக் கடைப்பிடித்தார் என்றும், அச்செப்பேடு கூறுகிறது.

சின்னண்ணா எழுதிய, அன்னமாச்சார்யாவைப் பற்றிய வாழ்க்கைச் சரிதத்திலிருந்து, அன்னமாச்சார்யா, சிறு வயது முதற்கொண்டே, தன்னிச்சையாகப் பாடல்கள் இயற்றிக் கொண்டிருந்தார் என்று தெரிகிறது. அன்னமய்யா, பதினாறு வயதாயிருக்கும் பொழுது, ஸ்ரீ வெங்கடேஸ்வரர், அவர் முன் தோன்றிய அனுபவம், அவருக்குத் தன் தலைவனிடமிருந்த பக்தியை அதிகரிக்கச் செய்துவிட்டது. வாழ்வில் மீதமிருக்கும் நாட்களில், ஒரு நாளைக்கு ஒரு துதிப்பாடலாவது புனையவேண்டு மென்பதைக் கடமையாகக் கொள்ள வேண்டுமென்று, பய பக்தியுடன் உறுதியெடுத்துக் கொண்டார்.

தன் பெற்றோர்கள் விருப்பத்திற்கிணங்க, திருமலம்மா, அக்கலம்மா என்ற பெயர்கள் கொண்ட, இரண்டு பெண்களை மணந்து, குடும்ப வாழ்க்கையை மேற்கொண்டார். திம்மக்கா என்றழைக்கப்படும் திருமலம்மாவே ஒரு கவிஞர். வரலாற்றுக் கவிதையாகிய 'ஸுபத்ரா கல்யாணம்' என்ற நூலை எழுதி, மக்களின் கவனத்தை ஈர்த்த முதல் தெலுங்குப் பெண் கவிஞர் என்ற பெயர் பெற்றார். அவளுடைய மகன் நரசிங்கண்ணாவும்,

மிகத் தகுதி வாய்ந்த ஒரு கவிஞர் என்று தெரிகிறது. ஆனால், அவரைப் பற்றி முடிவாக ஒன்றும் சொல்லமுடியவில்லை. பெரிய திருமலாச்சார்யா என்ற குழந்தையை அக்கலம்மா ஈன்றெடுத்தாள். பெரிய திருமலாச்சார்யா தன் தந்தையின் இறைபணிச் சிறப்பைப் பற்றி உணர்ந்திருந்தான். தந்தை பெற்றிருந்த இரு வரங்களையும், அவனும் பெற்றிருந்தான். அதாவது, பக்திப் பரவசத்துடன் பாடல் களை இயற்றினான், அவைகளை மகிழ்ச்சி பொங்கப் பாடினான். அவர்களுடைய குழந்தைகளும், புகழ்பெற்ற கவிஞர்களாக இருந்தனர். அன்னமாச்சார்யாவும், அவருடைய சந்ததியினரும், நூற்றைம்பது ஆண்டுகளுக்கு மேலாக, பல்வேறு பொருள்களைப் பற்றிய நூல்கள் இயற்றி, தெலுங்கு இலக்கியத்தை வளப் படுத்தினர். மேலும், பெரிய திருமலாச்சார்யா, ஸ்ரீ வெங்கடேஸ் வரருக்கு நாள்தோறும் ஒரு பாடல் இயற்றி அளிப்பது என்ற, உறுதியான பக்தியினால் எழுந்த தன் தந்தையின் வழக்கத்தைக் கடைப்பிடித்தார்.

திருமணமாகி சிலகாலம் கழிந்தவுடன், அன்னமாச் சார்யாவுக்கு விசிஷ்டாத்வைத சமயக் கோட்பாடுகள் பற்றி அறிந்து கொள்ள வேண்டுமென்ற தீவிர அவா உண்டானது. ஆகையால், அக்காலத்தில், அவர் இருந்த வட்டாரத்தில் சிறப்புற்ற யாத்திரைத் தலமான அஹோபிலம் என்ற ஊரிலுள்ள மடத்தை நிறுவிய வரும், வைணவ ஆசான்களில் புகழ்பெற்றவருமான, ஆதிவண் சடகோபயதி என்பவரை, அன்னமாச்சார்யா அணுகினார். சடகோபயதியின் குடும்பத்தோடு அவர் வசித்ததாகத் தெரிகிறது. விசிஷ்டாத்வைத சமயப் பிரிவைப் பற்றிய பல நூல்களை, குறிப்பாக, ஆழ்வார்களின் துதிப்பாடல்களான திவ்யப் பிரபந்தத் தையும், ஸ்ரீவைஷ்ணவர்களால் "சரணாகதி சாத்திரம்" (கடவுளிடம் தஞ்சம் புகுதல் பற்றிய சிறப்புப் பற்றிக் கூறுவது) என்று கருதப்படும் வால்மீகி இராமாயணத்தையும் படித்துக் கொண்டு, தன் ஆசானுடன், பல ஆண்டுகள் கழித்தார். கடவுளைத் தஞ்சம் புகும் பக்தனை,

*திருமால்*
*ஒருவனுடைய இதயத்தில்*
*நினைத்தாலே போதும்,*
*மற்றவைகளை*
*அவன் கவனித்துக் கொள்வான்.*

என்று கூற வைக்கும், தஞ்சம் புகும் சிறப்பை, அவர் நன்கு அறிந்து கொண்டார்.

பக்தனின் சிறிதும் உதவியில்லா நிலைக்கு, இடையறாது பெருகும் கடவுளுடைய கருணை ஈடு கொடுப்பதால், பக்தன், மனச் சோர்வடையச் சிறிதும் காரணமில்லை. கடவுள், எப்பொழுதும் தன்னைக் காப்பார் என்ற உறுதி, அன்னமாச்சார்யாவின் பல பாடல்களில் காணப்படுகிறது. அவைகளில் ஒன்று, அவர் கடவுளின் கருணைக்குத் தகுதியில்லாதவராயிருந்தாலும், அவரைக் காப்பதற்குக் கடவுள் ஆயத்தமாக இருக்கிறார் என்ற அவரது நம்பிக்கையைத் தெளிவுபடுத்துகிறது.

*அடியேன்,*
*துன்பத்தால் வாடும்,*
*அற்ப மனிதன்;*
*நீயோ*
*உலகிற்கெல்லாம்*
*ஈடற்ற தலைவன்;*
*நின் பெருமையே*
*என்றும் நிலைக்கும்.*

*பிறப்பு இறப்பின் இரகசியத்தை*
*என்னால் அறிய முடியவில்லை;*
*உன்னை*
*எவ்வாறு, எப்பொழுது*
*அறிய முடியும்?*
*நீ என்னைப் படைத்தவனாகையால்*
*என் மீது கருணை கொள்வாய்.*

*பாவம், புண்ணியம் பற்றிச் சிந்திக்க*
*நான் அக்கறை கொள்ளவில்லை;*
*உன்னைப்பற்றி நான்*
*எப்படிச் சிந்திக்க முடியும்?*
*என் இதயத்தில் நீ வீற்றிருப்பதால்*
*நீ தான்*
*என்னைப் பரிசுத்தனாக்கிக்*
*காப்பாய்.*

*என்னுடைய வெறுக்கத்தக்க நிலையையும்,*
*அசுத்தத்தன்மையையும்*
*நான் கவனிக்கவில்லை;*
*உன்னுடைய கருணைப் பார்வையை,*
*நான் எவ்வாறு*
*கவனிக்க முடியும்?*
*எனக்குத் தெரியும், நீ*
*என்னைக் கைவிட முடியாது என்று;*
*அடியேனை,*
*என்றும்*
*நீ காப்பாய்.*

ஸ்ரீ வெங்கடேஸ்வரருக்கு, ஒவ்வொரு நாளும், ஒரு துதிப்பாடல், அளிக்கவேண்டுமென்ற சபதத்தை, அன்னமய்யா பலகாலம் கடைப்பிடித்தார். தலயாத்திரைகளின் பொழுது, மற்ற கடவுள்கள் கோயில்களுக்குச் சென்று, அக்கடவுள்களின் பெருமை களைப் பாடும்பொழுது, ஏழு குன்றுகளின் தலைவனைப்பற்றிய ஒரு சிறு குறிப்புடனேயே முடித்தார். மற்ற கடவுள்களையும், அவர், ஸ்ரீ வெங்கடேஸ்வரராகவே கண்டார். அவருடைய பாக்களில், ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் நாமம் ஒரு முத்திரையாகத் திகழ்கிறது.

மனித ஆன்மா, தெய்வ சக்தியுடன் இணையத்துடிக்கும் ஆர்வத்தை விளக்கும் மிக நேர்த்தியாக இயற்றப்பட்ட, சங்கேதமாகக் கூறப்படும், காதல் உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட, அவருடைய சில பாடல்கள், இக்காலத்தைச் சேர்ந்தவை. இப்பாடல்கள், இராதையும், மற்ற கோபிகளும், கண்ணனுடன் புரிந்த காதல் விளையாட்டுகளின் வருணனை களைப் போல் உள்ளன. அன்னமாச்சார்யா யாத்திரைகள் சென்ற காலத்தில், மனித வாழ்வின் நிலையற்ற தன்மை பற்றியும், ஆன்மீகத்தின் சிறப்பு பற்றியும், பல பாக்கள் எழுதியிருக்கிறார். அவருடைய உணர்ச்சிகளின் உன்னதத்தன்மையும், இன்ப உணர்ச்சி பெருகியோடும் அவருடைய மொழியும், அவருடைய வளமான பக்தியும், குரலினிமையும், விரைவிலேயே மக்களைக் கவர்ந்தன. சின்னண்ணா, இந்த ஞானியின் புகழ் பற்றி சொல்வன்மையுடன் கூறுகிறார். மக்கள், அன்னமாச்சார்யா, மனித

உருவில், புவியில் நடமாடும், தும்புருவோ, நாரதரோ, அல்லது, கந்தர்வனோ என வியந்தனர்.

தாள்ளபாக்காவுக்கு அருகிலிருந்த டங்குடூரு என்ற ஊரின் தலைவர், சாளுவ நரசிம்ஹராயா என்பவர், அன்னமாச்சார்யாவின் துறவு வாழ்க்கையைப் பற்றிக் கேள்விப்பட்டார். மிக்க மரியாதையுடன் அவரை அணுகி, தன் ஊருக்கு வந்து, தன்னுடைய சிறப்பு விருந்தினராகத் தங்கும்படி, மிக அடக்கத்துடன் கேட்டுக் கொண்டார். உண்மையான வைணவனுக்கு இருக்க வேண்டிய அடக்கம், நரசிம்ஹராயாவிடம் இருப்பதைக் கண்டு, அன்னமாச்சார்யா, அவருடைய வேண்டுகோளுக்கிணங்கி, சில காலம் அவருடன் தங்கினார்.

நரசிம்ஹராயா, வளமுற்று செல்வச் செழிப்புடன் வாழ்ந்தார். விரைவிலேயே, விஜயநகர சாம்ராஜ்யத்திலுள்ள பெனுகொண்டா கோட்டையை ஆள்பவனாக உயர்ந்தார். தன்னுடைய செழிப்புக்குக் காரணம், அன்னமாச்சார்யாவின் ஆசிதான் என்று கருதினார். அன்னமாச்சார்யாவைத் தனக்கு நன்மை செய்பவராகவும், ஆசானாகவும், மதித்தார். அவருடைய அழைப்புக்கிணங்கி, அன்னமாச்சார்யா பெனுகொண்டாவிற்குச் சென்று, அங்கு, சில காலம் தங்கினார். எப்பொழுதாவது, அரண்மனை தர்பாரில் குழுமியிருக்கும் மக்களுக்குப் போதனை செய்யும் வகையில், ஸ்ரீ வெங்கடேஸ்வரர் மீது துதிப்பாடல்கள் பாடுவார்.

ஒரு சமயம், நரசிம்ஹராயா, அன்னமாச்சார்யாவை, ஸ்ரீ வெங்கடேஸ்வரர் மீது, காதல் பாட்டொன்று பாடும்படி வேண்டிக்கொண்டார். அவருடைய வேண்டுகோளின்படி, புதிய பாடல் ஒன்று பாடினார். அப்பாடலில், திருமாலின் காதலி, இரவு முழுவதும், தன் தலைவனுடன், காதல் விளையாட்டுகளில் ஈடுபட்டு, காலை பள்ளியறையிலிருந்து வரும்பொழுது, அவள் தோழிகள் எளனம் செய்வது போன்ற, நுட்பமான வருணனையொன்று, அடங்கியிருக்கிறது.

*அந்த இளமங்கையின்*
*மிருதுவான, கருஞ்சிவப்பு உதடுகளில்*
*கஸ்தூரிப்பொட்டுகள்*
*இங்குமங்கும்*
*ஏன் தெரிகின்றன?*
*அவைகள்,*

தன் அன்பார்ந்த தலைவனிடமிருந்து
அவளுக்குக் கொடுக்கப்பட்ட
ஒரு காதற்குறிப்பாக இருக்குமோ?

அம்மாதுடைய அழகான கண்களின் ஓரங்கள்
ஏன் சிவந்து விட்டன?
தோழிகளே!
அம்பு போன்ற
தன் பக்கவாட்டுப் பார்வையை,
தன் அன்பான தலைவனிடமிருந்து
திடீரெனத் திருப்பிய
நெகிழ்ச்சியில்,
அவள் கண்களில் இரத்தக் கசிவு ஏற்பட்டு,
சிவந்திருக்கக் கூடுமோ?

அம்மாதின் முலைகள்
இரவிக்கையினூடே பார்க்கும்பொழுது,
ஏன் அவ்வளவு ஒளி பொருந்தியவையாயிருக்கின்றன?
தோழிகளே!
பெண்மையாட்டுத்தன் முன்னே காதலன்
முலைகளில் செதுக்கிய,
பிறை சந்திர வடிவங்களிலிருந்து பரவும்,
மேனியில் காலை நிலவின் ஒளியாக இருக்கக்கூடுமோ?
அம்மாதின் கன்னங்கள்
வரிசையாக அமைந்திருக்கும் முத்துக்களால்
ஏன் அழுத்தப்பட்டிருக்கின்றன?
தோழி, கேள்!
காமம் மிகுந்த தலைவன்,
ஸ்ரீ வெங்கடேஸ்வரனுடன்,
அவள்,
காதல் களியாட்டம் புரியும்பொழுது ஏற்பட்ட
வியர்வைத் துளிகளாக இருக்கக்கூடுமோ?

காம மிகுதியால் கொடுக்கப்பட்ட முத்தத்தின் அடையாளமான கீழ் உதட்டிலுள்ள குறிகள், சிவந்த கண்கள் நுட்பமாகத் தெரிவிக்கும் தூக்கமின்மை, நகங்கள் முலைகளைக் கீறிய பொழுது, அவைகளில் ஏற்பட்ட கீறல்கள், உடல் களைப்பினால் முகத்தில் உண்டாகிய வியர்வை, ஆகியவை இந்தியக் காதல் பாக்களில் காணப்படும் வழக்கமான உருவணிகள். பழக்கப்பட்ட செயல்களுக்கு, அதிசயத்தக்க வகையில், விளக்கங்கள் கொடுக்கும், அபாரமான கற்பனைதான், மேற்கூறிய பாடல், நினைவில் தங்கும்படியான, கலையழகு மிகுந்த இலக்கியமாக அமையக் காரணமாயிருக்கிறது.

அன்னமாச்சார்யா, தர்பாரில் பாடலைப் பாடியவுடன், நரசிம்ஹராயா, ஒளிவிடும் அதனுடைய அழகினால் நெகிழ்ந்து விட்டார். அப்பாடலைத் திரும்பத் திரும்பப் பாடும்படி கேட்டுவிட்டு, அது உண்மையான கவிதைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு எனப் பூரித்துப் போனார். மிகக் களிப்படைந்த அவர், ஒழுங்கு மீறி, அன்னமாச்சார்யாவை தன்மீது ஒரு பாடல் இயற்ற வேண்டுமென வேண்டிக்கொண்டார். நரசிம்ஹராயாவுக்குக் கவிதையின் மீதிருந்த ஆழ்ந்த பற்றுதான், அவருடைய விபரீதமான வேண்டுகோளுக்குக் காரணமாயிருந்தது என்பது உண்மை. ஆனால், செல்வச் செருக்கும், அதிகாரமும், ராயாவுடைய மதியை மயக்கியது. திருமாலுக்கு நன்றிக் கடன்களாக, அவருடைய பாதங்களில் காணிக்கையாக வைக்கும் பாக்களை இயற்றும் ஒரு முனிவரை, தன் கலையைக் கேவலம், ஒரு இராச்சியத்தை ஆளுபவரைப் பற்றிப் புகழ்ந்து பாட, உபயோகிக்கச் சொன்னார்.

அன்னமாச்சார்யா, நரசிம்ஹராயாவின் வேண்டுகோளினால், மிகவும் எரிச்சலுற்றார். ராயாவிடம், தன் இசையும், கவிதைகளும், திருமாலுக்குச் சேவை செய்வதற்காக அர்ப்பணிக்கப்பட்டிருக்கின்றன. மனிதனைப் புகழ்ந்து உரைப்பதற்கு அவைகள் ஒரு போதும் பயன்படுத்தப்படமாட்டா எனத் தெளிவாகக் கூறினார்.[14] இச்சம்பவம், அரண்மனை உறுப்பினர்கள் முன்பு நடந்ததால், நரசிம்ஹராயர் ஆவேசமடைந்தார். நரசிம்ஹராயர் கோபாவேசத்தில், கவிஞர், இரும்புச் சங்கிலியால் கட்டப்பட்டுச் சிறையில் அடைக்கப்படவேண்டுமென்று ஆணையிட்டார். அவருடைய பணியாட்கள் ஆணையை நிறைவேற்றினார்கள். அன்னமாச்சார்யாவை சிறையிலிட்டு, பல நாட்களுக்குக் காவல் காத்தனர்.

அன்னமாச்சார்யா, தன் நிலையை ஆழ்ந்து யோசித்தார். பல நாமக்களில் ஒன்றான, ப்ரணதார்த்திஹரன் (பக்தர்களின் இன்னல் களை அழிப்பவன்) என்ற நாமாவைத் தாங்கி நிற்கும் , மிகவும் உயர்ந்த காவலனான, திருமாலைச் சுற்றி, அன்னமாச்சார்யாவின் எண்ணங்கள் சுழன்றன. சற்றும் யோசியாமல் ஒரு பாடலைப் பாடினார். பக்தர்களுடைய இன்னல்களின் தீப்பிழம்பை அணைப் பதில் சிறப்பு வாய்ந்த கடவுளின் பெயரில், தனக்கிருக்கும் அசையா நம்பிக்கையை, தெரிவித்தது அப்பாடல்.

*பசி மயக்கத்திலோ,*
*களைப்பாயிருக்கும் நேரத்திலோ,*
*ஒருவனுக்குத்*
*திருமாலின் நாமம்தான்*
*உதவியளிக்கும்;*
*வேறு ஏதும் வழியே இல்லை.*

*தேவைப்பட்ட காலத்திலோ,*
*பிரிவிலோ,*
*கைது செய்யப்பட்ட காலத்திலோ,*
*சிறை வாசத்திலோ,*
*ஒருவனுக்கு ஒரே ஆதரவு,*
*திருமாலின் புனித நாமம்தான்;*
*இக்கூற்றை எவன் நிராகரித்தாலும்*
*அவனுக்கு வேறு வழியே இல்லை.*

*இன்னல்கள் வந்த காலத்தும்,*
*அவதூறுகள் அனுபவிக்கும் காலத்தும்,*
*தீங்குகள் நேர்ந்த காலத்தும்,*
*ஒருவனுக்கு ஒரே உதவி*
*திருமாலின் நாமம்தான்.*
*ஒருவன் எவ்வளவுதான் வேறு எங்கு உதவி தேடினாலும்*
*அவனுக்கு வேறு வழியே இல்லை.*

*சங்கிலிகளால் கட்டப்பட்ட போதும்,*
*மரணதண்டனைக்குத் தீர்ப்பு அளிக்கப்பட்ட போதும்,*

*கடன் கொடுத்தோர் வழி மறித்தபோதும்,*
*தப்பிக்கும் ஒரே வழி*
*வெங்டேசனின் நாமத்தைச் சொல்லுவது தான்;*
*எவ்வளவுதான் ஒருவன் போராடினாலும்,*
*வேறு வழியே இல்லை.*

இப்பாட்டைப் பாடியவுடன், அன்னமாச்சார்யாவைக் கட்டியிருந்த சங்கிலிகள் அறுந்து விழுந்தன. திகைத்து நின்ற காவலாளிகள், தங்கள் எசமானனிடம் ஓடி, தாங்கள் கண்ட அதிசய நிகழ்ச்சியைப் பற்றிக் கூறினர். ஆணவத்தினால் புடைத்திருந்த, தானடைந்த அவமானத்தினால் வருந்திய, நரசிம்ஹராயாவோ, அவர்கள் சொன்னதை நம்பத்தயாராயில்லை. அவர், அவர்கள் சொன்னது பொய்க்கதை, பொய்க்கதையைப் பரப்பிவிடுவதற்காக, அவர்கள் தக்க சன்மானம் அளிக்கப்படுவதாக வாக்குறுதி அளிக்கப்பட்டிருப்பார்கள், என்று எண்ணினார்.

உண்மையைக் கண்டறியத் தானே சிறைக்குச் சென்றார். மறுபடியும், அன்னமாச்சார்யாவின் கைகளைச் சங்கிலிகள் கொண்டு பிணைக்கச் செய்தார். வெளிப்படையாக, அவரை, ஏளனமாகப் பேசினார். மற்றொரு பாடல்பாடித் தன்னை விடுவித்துக் கொள்ள வேண்டுமென்று யோசனை கூறினார். அன்னமாச்சார்யாவோ, அவரது அறியாமையைக் கண்டு நகைத்தார். மறுபடியும், எல்லா இன்னல்களைக் களையவல்ல திருமால் நாமத்தின் சிறப்பைக் கூறும், முன் பாடிய பாடலைப் பாடினார். உடனே, உணர்ச்சியற்று நின்ற அரசன் பார்த்துக் கொண்டேயிருக்கும்பொழுதே, அன்னமாச்சார்யா உடம்பிலிருந்து சங்கிலிகள் அறுபட்டு விழுந்தன. அரசன், முனிவருடைய சிறப்பை உணர்ந்தார். அவர் காலில் விழுந்து, அடக்கத்துடன் அவருடைய மன்னிப்பைக் கோரினார். அன்னமாச்சார்யா, அவரை மன்னித்தார். திருமால் பக்தர்களின் உணர்ச்சிகளை அவமதிக் காமலிருக்கும்படி எச்சரிக்கை செய்தார். அறியாமையில் மூழ்கிய அரசனிடம், கிருத யுகத்தில் தியானம் மூலமும், திரேதாயுகத்தில் வேள்விகள் மூலமும், துவாபரயுகத்தில் மதக்கோட்பாடுகளின்படி செய்யப்படும் வழிபாடு மூலமும், அடையக்கூடிய திருமாலின் ஆசி, கலியுகத்தில் அவருடைய சிறப்புகளைப் பாடியே அடையலாம். ஆகையால், திருமாலைப் பற்றிப் பாடுபவர்கள், மரியாதையுடன் நடத்தப்படவேண்டுமென்று கூறினார்.

அன்னமாச்சார்யா, உலக இன்பங்களிலேயே மூழ்கிக் கிடப்பவர்களுடன் உறவு வைத்துக் கொள்ளக்கூடாது என்று முடிவு செய்து, திருப்பதிக்குச் சென்று, அங்கு அமைதியாக வாழ்ந்தார். இச்சந்தர்ப்பத்தில் ஒன்று சொல்ல வேண்டும். அன்னமாச் சார்யாவும், அவரது சந்ததியினரும், செல்வந்தர்களுடன், அதிகார வர்க்கத்தினருடன், ஏன், பின்பு விஜயநகர சாம்ராஜ்யத்தின் அரசனாகப் பதவியேற்ற சாளுவ நரசிம்ஹராயர் உட்பட, பல அரசர் களுடன், சக்கரவர்த்திகளுடன், உறவு வைத்துக்கொண்டிருந் தாலும், அவர்கள், அற்ப மனிதனைப் பற்றி ஒரு பாட்டுப் பாடியதில்லை, ஒரு கவிதை எழுதியதில்லை. சன்மானங்களும், பட்டங்களும், அவர்கள் கேட்காமலேயே, அவர்களைத் தேடி வந்தன. அவர்கள் செழிப்பையும், துன்பத் தையும், புகழ்ச்சியையும், இகழ்ச்சியையும், விருப்பு, வெறுப்பற்ற நிலையில் ஏற்றனர். மனித வாழ்வில், அடிக்கடி, நிச்சயமாக, மாறி மாறி வரும் சூழ்நிலைகளில், ஸ்ரீ வெங்கடேஸ்வரர் ஒருவர்தான், தங்களுடைய விலைமதிப்பற்ற பொக்கிஷம் எனப் போற்றினர்.

சிறப்பெய்திய வைணவ ஆசான், யமுனாச்சார்யா வாழ்க் கையில் நிகழ்ந்த, நம் கவனத்தைக் கவரும், ஒரு நிகழ்ச்சி, திருமால்தான், ஒருவனுக்கு முன்னோர்கள் விட்டுச் சென்ற பொக்கிஷம் என்ற கருத்தை மையமாகக் கொண்டிருக்கிறது. அன்னமாச்சார்யா, வைணவத்தின் உட்கருத்தை முழுவதும் அறிந்து கொண்டார். திருமால்தான் உலகில் தலைசிறந்த தலைவன் என்ற தனது நம்பிக்கையை வலியுறுத்தி, அவன் ஒருவனுக்கே, ஒருமனதுடன் கூடிய பக்தியுடன், பணிபுரிய வேண்டுமெனக் கூறினார். ஒருவன், தனக்கு முக்கியமாக, கடவுளிடம் இருக்கவேண்டிய விசுவாசத்தைப் புறக்கணித்து விட்டு, தன்னைச் சுற்றியுள்ள மக்களுக்குப் பணிபுரிவதால் ஏற்படும் தாழ்வை ஒரு பாடலில் விளக்கி கூறுகிறார்.

*ஏன் ஒருவன்*
*மனிதனாகப் பிறக்க வேண்டும்?*
*பிறருக்குப்*
*பணிபுரியவேண்டும்?*
*நாளுக்கு நாள்*
*துன்பத்திலேயே*
*வாழவேண்டும்?*

*தன் வயிற்றை நிரப்பிக் கொள்வதற்காக,*
*ஒரு உருண்டை உணவிற்காக,*
*தன்னை பிறர்முன்*
*தாழ்த்திக் கொள்வதற்காக,*
*காம உணர்விற்கு இடமளித்து*
*உலக இன்பச் சகதியில்*
*மாட்டிக் கொள்வதற்காக,*
*ஏன் ஒருவன்*
*அழுக்குத் தோய்ந்த இடத்திற்குச்*
*செல்ல வேண்டும்?*

*எல்லா உயிரினங்களிலும்*
*வசிக்கும்,*
*எல்லா உருவங்களையும் எடுக்கும்,*
*கருணையுள்ள தலைவன்*
*வெங்கடாத்ரிக்குப்*
*பணிவிடை செய்யுங்கள்,*
*பேரின்பத்தைப் பெறுங்கள்.*

அன்னமாச்சார்யாவைப் பாதுகாக்கும், புனிதப்படுத்தப்பட்ட கடவுள் சிலைகள் காணாமற் போய்விட்டன என்றும், அவர் மிகவும் துயரத்தை அனுபவித்தார் என்றும், அவருடைய பாடல்கள் ஒன்றிலிருந்து தெரியவருகிறது.[15] அந்தச் சிலைகளை அவர் எங்கு சென்றாலும், எடுத்துச் சென்று, மதச்சடங்குகளுடன் வழிபடுவார். எப்படி, எப்பொழுது, எங்கு, அவைகள் காணாமற் போயின, யாரேனும் ஒருவருடைய திட்டமிட்ட பகைச் செயல் காரணமாக, அவை காணாமற் போயினவா என்பதைப் பாட்டிலிருந்து உறுதி செய்ய முடியாது. ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயமாகச் சொல்ல முடியும். சிலைகள் காணாமற் போனவுடனேயே, மனவலி பொறுக்க முடியாமல், கூச்சலிட்டார். இந்துமதப் புராணங்களின், கடவுள் பக்தி நிறைந்த, வீரம் செறிந்த பாத்திரங்களான, அனுமன், கருடன், பிரஹலாதன், அர்ஜுனன், சேஷன், கார்த்தவீர்யார்ஜுனன் போன்றோரிடம், நாள்தோறும், கடவுளுக்கு வழிபாடு செய்ய வேண்டிய நேரம், நெருங்கிக் கொண்டிருப்பதால், உருவச்சிலை களைத் தன்னிடம் சேர்ப்பிக்கும் படி முறையிடுவார்.

அனுமனுடைய உதவியை, அன்னமாச்சார்யா ஏன் நாடினா ரென்றால், பரம்பரைக் கதையொன்றிலிருந்து, அனுமன், சிறைப் பிடித்தவர்களை மீட்கும் சக்தி பெற்றவர் எனப் புலனாகிறது. இராமனையும் இலக்குவனையும், ஒரு சமயம், இராவணனுடைய உறவினன் மஹிராவணன், சிறைப்பிடித்துப் பாதாள உலகிற்கு எடுத்துச் சென்றுவிட்டான். அனுமன், மஹிராவணனைக் கொன்று, அவர்களை மீட்டான். இவ்வாறே, கருடன், இலங்கையில் நடந்த சண்டையில், இந்திரஜித்தினால் ஏவப்பட்ட நாகாஸ்திரத்தினால், இராமனும், இலக்குவனும் கட்டுண்டு கிடந்தபோது, அவர்களை மீட்டான். பிரஹலாதன், கடவுளை நரசிம்ஹர் உருவத்தில், ஒரு தூணில் காட்சி கொடுக்கச் செய்தான். குருக்ஷேத்திரத்தில் நடைபெற்ற போரில், அர்ஜுனன் கடவுளின் விஸ்வரூபக் காட்சியைக் காணமுடிந்தது. சேக்ஷன், கடவுளுக்கு நெருங்கிய பணியாளனாக இருப்பதால், அவர் பக்கத்தில் எப்பொழுதும் இருக்க முடியும். திருடுபோன அல்லது காணாமற்போன பொருள்களை, திருமாலின் சிறந்த பக்தர்களில் ஒருவரான கார்த்தவீர்யார்ஜுனன் பெயரைச் சொன்னால், திரும்பப் பெறலாம் என்று, 'மந்த்ர ரத்னாகரம்' என்ற நூல் கூறுகிறது.

உருவச் சிலைகள், திரும்பக் கிடைக்கப் பெற்ற சம்பவங்கள் பற்றித் தெரியவில்லை. இந்நிகழ்ச்சியைப் பற்றிப் பரவியிருக்கின்ற கற்பனைக் கதைகள், உற்சாகம் மிகுந்த, ஆனால், பகுத்தறியாத, மனிதர்களால் உண்டாக்கப்பட்டவை. அவர்கள், எந்த அளவுக்கு வீண் கற்பனை செய்பவர்களாக இருந்தார்களோ, அந்த அளவுக்கு, ஒரு நிகழ்ச்சிக்கு ஆதரவு தரும் சாட்சியங்களில் அலட்சியப் போக்குக் காண்பித்தனர். அன்னமாச்சார்யா குடும்பத்திற்குச் சொந்த மான, புனிதப்படுத்தப்பட்ட, ஸ்ரீ வெங்கடேஸ்வரர், அவருடைய தெய்வ மனைவிகள், திருமகள், நிலமகள் ஆகியோருடைய உருவச்சிலைகள், திருப்பதிக்கருகிலுள்ள, ஸ்ரீநிவாஸமங்காபுரம் என்ற கிராமத்திலுள்ள ஒரு ஆலயத்தில், பாதுகாத்து வைக்கப் பட்டிருக்கின்றன.

மனிதனாகப் பிறந்தாலே, ஓரளவு துன்பத்தை அனுபவிக்க வேண்டியதுதான். முனிவர்களும், பாவிகளும், துன்பத்தை அனுபவிக்க வேண்டியிருக்கிறது. உலகெங்கிலுமுள்ள முனிவர்

களின் வாழ்க்கை, அவர்கள், கடவுளின் ஆனந்தக் காட்சியை அனுபவிக்கும்முன், துயரங்களுக்கு உள்ளாக வேண்டியிருப்பதைக் காட்டுகிறது. ஆன்மா, முடிவில்லா ஆனந்தத்தை அனுபவிக்கும் காலை விடியும் முன், கரிய இரவைக் கடக்க வேண்டியிருக்கிறது. உலகப் பற்றுள்ள மக்களை, துன்பம் நோகச் செய்து, அவர்களை நாத்திக வாதிகளாகவோ, அல்லது கடவுளைப் பற்றி அறிய முடியாது என்ற வாதத்தை ஆதரிப்பவர்களாகவோ, மாற்றி விடுகிறது. ஆனால், தெய்வபக்தியுடையவர்களை, துன்பம், கடவுளிடம் இன்னும் சற்று நெருக்கமாக இட்டுச் செல்லுகிறது. அவர்களுடைய தெய்வ பக்தியை அதிகரிக்கிறது. அவர்கள், ஆன்மீகத் துறையில் வளர்ச்சியடைவதைத் துரிதப்படுத்துகிறது. தெய்வபக்தி உள்ளவர்கள், அன்னமாச்சார்யா போல் கவிஞர்களாக இருந்தால், அவர்களுடைய கவித்திறமை, சூழ்ந்திருக்கும் இருளுக்கு மத்தியில், கடவுளின் மீது நம்பிக்கையைப் பறைசாற்றும், இறவாத் துதிப்பாடல்கள் பாட, அவர்களுக்கு ஊக்கமளித்து, இலக்கியத்தை வளப்படுத்துகிறது.

அன்னமாச்சார்யா, பெனுகொண்டாவிலிருந்து திருப் பதிக்குச் சென்றார். வெங்கடாத்ரிக் குன்றில் சிலகாலம் வசித்தார். அங்கு, இளநங்கையொருத்திக்கு, ஸ்ரீ வெங்கடேஸ்வரர் மீதுள்ள அடங்கா ஆசையையும், அவ்வாசை நிறைவேறியது பற்றியும் வருணித்து, 'சிருங்கார மஞ்ஜரி' என்ற சிறு வரலாற்றுக் கவிதை நூல் புனைந்தார். தன் தலைவனுக்கு, நாள்தோறும், ஒரு துதிப்பாடல் இயற்றி அளிப்பது என்ற அவரது வழக்கம் தடையின்றித் தொடர்ந்தது. புனிதக்குன்றுகளையும், அதன்மீது குடிகொண்டுள்ள திருமாலின் கோயிலையும் கண்டதினால் எழும், மனக்கிளர்ச்சியை வெளிப்படுத்தும், பாடல்களைத் தவிர, அக் கோயிலில் தான் கண்ட பகட்டான காட்சிகள், மதச் சடங்குகள், விழாக்கள் பற்றி விவரிக்கும், எண்ணிறந்த பாடல்களை இயற்றினார். சில பாடல்கள், உலக வாழ்க்கையில் சொந்த பந்தங் களின் நிலையில்லாத் தன்மை பற்றியும், பக்தி, கடவுளிடம் தஞ்சம் புகுதல், ஆகியவையின் தலையாய முக்கியத்துவம் பற்றியும் கூறுகின்றன.

அன்னமாச்சார்யா, பலமுறை, குன்றுகள் மீதேறி, திருமால் கோயிலைக் காணச் சென்றிருக்கிறார். ஒரு சமயம், அவர் குன்றுகள்

மீது ஏறும்பொழுது, குன்றுகளின் சிகரங்கள், பாம்புகள் படமெடுத்தாடுவதை நினைவுறுத்துவது போல் அமைந்திருந்த தைக் கவனித்திருக்க வேண்டும். உண்மையில், அப்புனிதத் தலத்தைப் பற்றிய புராணக்கதைகள், பூவுலகில், திருமாலின் விளையாட்டுகளுக்கு, ஒரு தளமாக இருப்பதற்காக, வைகுண்டத்தி லிருந்து, சேஷ நாகம், பூமிக்கு வந்தது என்று கூறுகின்றன. அன்னமாச்சார்யாவின் புகழ்பெற்ற பாடலொன்று, குன்றின் புனிதத் தன்மையையும், குன்றின் மேலுள்ள கோயிலின் புனிதத் தன்மையையும், நன்கு எடுத்துக் காட்டுகிறது.

*கணக்கிலடங்கா சேஷ நாகங்களின் படங்களால்*
*நிழல் உண்டாக்கப்பட்ட*
*திருமாலின் இடத்தைப் பார்!*

*பிரமனுக்கும்,*
*மற்ற கடவுள்களுக்கும்*
*காணக்கிடைக்காத*
*ஒரு காட்சியான,*
*எண்ணிலடங்கா முனிவர்களின்*
*இருப்பிடமான,*
*வானளாவ உயர்ந்திருக்கும்*
*வேங்கடக் குன்றினைப் பார்!*
*ஆனந்தம் கொடுக்கும்*
*குன்றினைப் பார்த்து வணங்கு!*

*விண்ணுலகக் கடவுள்களுக்குத்*
*தெரிந்தெடுக்கப்பட்ட தங்குமிடமான*
*சேஷாத்ரிக்குன்று*
*அருகிலேயே உள்ளது;*
*கண்ணைப் பறிக்கும்*
*பொன்னால் வேயப்பட்டிருக்கும் கோபுரங்களுடைய,*
*எண்ணிலடங்கா பிரமன்கள் வசிக்கும்,*
*நிலையான, மதிப்பில்லாத பொக்கிஷத்தைப் பார்.*

*விண்ணுலக ஆனந்தத்தின் இருப்பிடமான*
*ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் சிறப்புக்குக் காரணமான,*
*அபரிமிதமான செல்வங்களின்*
*உண்மைப் பொக்கிஷமான,*
*புனிதங்களுக்கெல்லாம் புனிதமான,*
*வேங்கடக் குன்றைப் பார்.*

பகவத் கீதையில், கண்ணன், அர்ஜுனனுக்குக் காலச் சக்கரச் சுழற்சியில், மறுபடி, மறுபடி, பிறவி எடுப்பதிலிருந்த விடுபட, பலவழிகளை உபதேசித்துவிட்டு, அதன் இறுதிப்பகுதியில், ''என்னைத் தஞ்சம் புகு, விசனப்படாதே, உன்னை எல்லாப் பாவங் களிலிருந்தும் விடுவிக்கிறேன்'' என்று கூறுவதை, விசிஷ்டாத் வைத மதவாதிகள் உறுதிப்படுத்துகின்றனர். கடவுளின் பாதங்கள், பக்தர்களின் ஒரே சரணாலயம். ஆகையால், அவைகள், அன்புக் குகந்த, வணங்கப்படவேண்டிய பொருள்களாக, மதிக்கப் படுகின்றன. அன்னமாச்சார்யா, கடவுள் பாதங்களின் சிறப்புப் பற்றிப் பல பாக்கள் எழுதியிருக்கிறார். கடவுள், பூமியில் எடுத்த பல அவதாரங்களில், அவர் பாதங்களுடன் சம்பந்தப்பட்ட, பல நிகழ்ச்சிகள் பற்றி, அன்னமாச்சார்யாவின் பாடலொன்று ஆர்வத்துடன் நினைவு கூறுகிறது.

*பிரமன் கழுவிய*
*பாதம் இதுவே;*
*முழு முதற் கடவுளின்*
*உட்கருத்தை விளக்கும்*
*பாதம் இதுவே.*

*உலகை அளக்கத்*
*தூக்கப்பட்டு,*
*பலியின் தலையில் வைக்கப்பட்ட*
*பாதம் இதுவே.*
*பலாவின் எதிரிக்குப்*
*பாதுகாப்புக் கொடுக்க,*
*விண்மீன்கள் பொதிந்த*
*வானத்தை,*
*எட்டி உதைத்த*
*பாதம் இதுவே.*

*ஒரு மாதை*
*பாவத்திலிருந்து விடுவித்து,*
*நாகத்தின் தலையில் வைக்கப்பட்ட*
*பாதம் இதுவே.*
*இலக்குமி அன்புடன்*
*பிடித்துவிடும்*
*பாதம் இதுவே!*
*குதிரையின் மீது சவாரி செய்யும் கடவுளின்*
*பாதம் இதுவே.*

*சிறந்த துறவிகளுக்கு,*
*எண்ணிறந்த வரங்கள் கொடுக்கும்,*
*பாதம் இதுவே.*
*ஆசீர்வதிக்கப்பட்ட*
*நின் பாதங்கள்,*
*மகிழ்ச்சியின் இராச்சியம்;*
*வெங்கடாத்ரி*
*என்றும் வசிக்கிறாரென்று*
*அறைகூவும்*
*பாதங்கள் இதுவே.*

வாமனாவதாரம் எடுத்து, விண்ணுலகையும், பூவுலகையும், அளந்து, பலி என்ற அரக்கனை அடக்கி, பலாவின் விரோதியான இந்திரனுக்குச் சுவர்க்கத்தை மீட்டுக் கொடுத்தார். இராமனாக, தன் பாதங்கள் அகலியையின் மீதுபட்டவுடனே, அவளை, பாவக் கரையிலிருந்து மீட்டார். கண்ணனாகக் காளியப் பாம்பின் படத்தின் மீது, நடனமாடினார். கல்கி அவதாரமெடுத்து, தீய சக்திகளை அழிப்பதற்காகக் குதிரை மேல் வருவார்.

அன்னமாச்சார்யா, இறுதி நாட்களைத் தாள்ளபாக்கத்திலும், திருப்பதியிலும், மாறி மாறி வசித்துக் கொண்டும், ஸ்ரீ வெங்கடேஸ்வரர் ஆலயத்தில், ஆண்டு தோறும் நடைபெறும் பிரம்மோத்ஸவங்களில் தவறாது கலந்து கொண்டும், கழித்தார். அவரைப் பாராட்டிய அன்பர்கள், அவருக்கு நிலங்களைத் தவிர, அவர் கேட்காமலேயே, பல பரிசுப்பொருள்களையும் தந்தனர்.

அவருக்குக் கிடைத்த வருமானத்தைக் கொண்டு, ஆண்டவனுக்குப் புதிய விழாக்கள் நடத்தியும், புதிய உணவு வகைகளைப் படைக்கச் செய்தும், சேவை செய்தார்.

அன்னமாச்சார்யாவின் பேரன்களில் ஒருவரான, ரேவநூரி வெங்கடாச்சார்யா எழுதிய, 'ஸ்ரீபாதரேணு மாஹாத்ம்யமு', 'சாகுந்தல பரிணயமு' என்ற இரண்டு கவிதை நூல்களில் கிடைக்கப்பெறும் திட்டவட்டமான குறிப்புகளிலிருந்து, அன்னமாச்சார்யா, அலர்மேல் மங்கைக்குத் தன்னைத் தந்தையாக நினைத்துக் கொண்டு, தன் தெய்வமகளுக்கும், ஸ்ரீ வெங்கடேஸ்வரருக்கும், திருமண உற்சவம் நடத்தினார் என்று அறிகிறோம். முன்னொரு காலத்தில், பெரியாழ்வார், தன் வளர்ப்பு மகள், ஆண்டாளை, ஸ்ரீ அரங்கநாதருக்குத் திருமணம் செய்து வைத்ததால், திருமாலின் மாமனார் என்று வைணவர்களால் புகழப்பட்டார். அன்னமாச்சார்யாவும், அவர் காலத்தில் வாழ்ந்தவர்களால், ஸ்ரீ வெங்கடேஸ்வரருக்கு மாமனார் என்று போற்றப்பட்டார்.

பரமனிடத்தில் இடைவிடாது பக்தி செலுத்தி, அவருக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு பணிவிடைகள் செய்ததினால், அன்னமாச்சார்யாவுக்கு அதிசயத்தக்க சில சக்திகள் உண்டாயின. அவர் உறுதியாக நினைத்தது நடந்தேறியது. அவருடைய ஆசியோ, சாபமோ, நிச்சயமாகப் பலித்தது. திருமலாச்சார்யாவும், சின்னண்ணாவும், தங்களுடைய நூல்களில், ஒரு முந்திரி மரத்தைப் பற்றிய கதையொன்றைக் கூறுகின்றனர். ஒரு சமயம், அன்னமாச்சார்யா, செக்கச் சிவந்த முந்திரிப் பழங்கள் சிலவற்றைப் பறித்து, ஸ்ரீ வெங்கடேஸ்வரரை வழிபடும்போது, அவைகளை அவருக்கு அளித்தார். பிறகு, அவற்றில் ஒன்றை அவர் சுவைத்துப் பார்த்து, அது புளிப்பாயிருப்பது கண்டு, தன் செயலுக்கு வருந்தினார். அம்முந்திரி மரம், இனிப்பான பழங்களையே தரவேண்டுமென்று விரும்பினார். உடனே, அவருடைய விருப்பம் நிறைவேறியது. ஒரு ஏழை அந்தணன், தன் திருமணத்திற்குப் பணம் தேவைப்பட்டபொழுது, அன்னமாச்சார்யாவின் ஆசியை நாடிப் பெற்றான். அப்பொழுது, அவ்வழி சென்று கொண்டிருந்த ஒருவன், திருமணத்திற்கு நிறைய பொருளுதவி வழங்க, அன்னமாச்சார்யா, ஏழை அந்தணனுக்கு, அவ்விடத்திலேயே,

தாராளமாக நிதியுதவி செய்ய முடிந்தது. தங்கள் துன்பங்களுக்கு அன்னமாச்சார்யாவின் அன்பினால், பரிகாரம் காணமுடியுமென்று, யாசகர்கள், விரைவிலேயே அவரைச் சூழ்ந்து கொண்டனர்.

அன்னமாச்சார்யா, முதுமையடைந்த பொழுது, கர்நாடகத்தின் சிறந்த கவிஞரும், முனிவருமான, புரந்தரதாஸர், அவரைத் திருப்பதியிலோ, விஜய நகரத்திலோ சந்தித்தார். இரு திருமால் பக்தர்களும், ஒருவரையொருவர் சந்தித்துத் தங்களுடைய பாக்களைப் பற்றி விவாதிப்பதில் மிக்க மகிழ்ச்சியடைந்தனர். புரந்தரதாஸர், அப்பொழுது மிகவும் இளமையாக இருந்திருக்க வேண்டும். அவருடைய, ''சரணு, சரணு, ஸுரேந்த்ரவந்தித'' என்ற பாட்டு, அன்னமாச்சார்யாவின் புகழ்பெற்ற ''சரணு, சரணு, ஸரேந்த்ரஸன்னுத'' என்ற தென்னகத்தே பஜனைக் குழுக்களில் பாடப்படும் பாடலுடன், ஒத்திருக்கிறது. புரந்தரதாஸருடைய பாட்டில், புகழ்ச்சிக்குரியவர், அஹோபலத்தின் ஸ்ரீ நரசிம்ஹர். அன்னமாச்சார்யாவின் பாடல், ஸ்ரீ வெங்கடேஸ்வரரை மையமாகக் கொண்டது.

அன்னமாச்சார்யா, மிக முதிர்ந்த வயது வரை வாழ்ந்தார். அவர், தன் வாழ்க்கையைத் திரும்பிப் பார்க்கும்பொழுது, ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் முக்கிய பாடகராக நிறையப் பணி புரிந்தது பற்றி மகிழ்ச்சி கொள்ளலாம். அவருடைய சந்ததியினர், அன்னமாச்சார்யா, பல ஆண்டுகளில், முப்பத்திரண்டாயிரம் பாக்கள் இயற்றினார் என்று கூறுகின்றனர். அவர், தன்னுடைய குழந்தைகளும், பேரக் குழந்தைகளும், தன் அடிச்சுவட்டைப் பின் பற்றி, திருமாலை வழிபட்டு, ஆக்கத்திறன் கொண்ட எழுத்தாளர்களாகச் சிறப்பெய்தினார்களென்று மகிழ்ச்சியடைந்தார். தன் பேரன்களில் ஒருவரான, சின்ன திருமலாச்சார்யாவுக்குப் பூணூல் அணிவிக்கும் சடங்கைச் செய்வித்தார் என்று அறிகிறோம். நம்பத்தகுந்த கல்வெட்டுச் சான்றிலிருந்து, ஸ்ரீ வெங்கடேஸ்வரருக்கு, நாள்தோறும் ஒரு புதிய துதிப்பாடலை இயற்றி அளிக்கும் பணியை, பெரிய திருமலாச்சார்யாவிடம் ஒப்படைத்தார் என்று தெரிகிறது. அன்னமாச்சார்யா, 1503ஆம் ஆண்டு பிப்ரவரி 23ஆம் தேதி இறைவனடி எய்தினார்.

அன்னமாச்சார்யா, வாழ்க்கையை, பாசாங்குகளும், பயனற்ற தொழில்களும் நிறைந்த ஒரு நாடகத்திற்கொப்பாகக் கருதினார்.[16]

**திருமாலின் சாம்ராஜ்யத்தை அடையவேண்டும் என்ற மனித வாழ்வின் முக்கிய நோக்கத்திலிருந்து, ஒரு கணமேனும், அவர் பிறழவில்லை. தனக்குத் திருமாலின் மீதுள்ள நம்பிக்கையை, பலரும் அறிந்த, தன் பாடலொன்றில் மிக அழுத்தமாகத் தெரிவிக்கிறார்.**

*நாடக நடிப்பைத் தவிர*
*வேறொன்றுமில்லை*
*இவ்வுலக வாழ்வு;*
*இடைவிடா முயற்சியால்*
*அடையப்படுவது*
*சுவர்க்கம்.*

*பிறப்பும் நிச்சயம்,*
*இறப்பும் நிச்சயம்;*
*வாழ்க்கை ஆரம்பிப்பதற்கும்*
*முடிவதற்கும்*
*இடையேயுள்ள காட்சி,*
*நாடக நடிப்பைத் தவிர*
*வேறொன்றுமில்லை.*
*கண்ணுக்குத் தெரியும் உலகம்*
*நம்மைச் சுற்றிப் பரந்து கிடக்கிறது;*
*அதற்கப்பாலிருக்கிறது,*
*நம் இறுதிக் குறிக்கோளான*
*சுவர்க்கம்.*

*ஒருவன் உணவு உண்பதும்*
*ஆடை அணிவதும்*
*நிச்சயம்;*
*மற்றவையெல்லாம்*
*நாடக நடிப்பே.*
*புண்ணியத்தையும்,*
*பாவத்தையும்*
*கடந்துதான்,*
*சுவர்க்கம்*
*அடையப்படுகிறது.*

*முடிவே கிடையாது*
*ஒருவனுடைய*
*தீய, நற்செயல்களுக்கு.*
*காலம்*
*மனிதனைப் பார்த்து*
*ஏளனம் செய்கிறது;*
*காலம் நகர்ந்துகொண்டேயிருக்கிறது,*
*காட்சி சென்றுகொண்டேயிருக்கிறது,*
*எப்பொழுதும் போல்.*

*உச்சியில் குடிகொண்டிருக்கிறான்*
*தனக்கு நிகரில்லாத் தலைவன்*
*ஸ்ரீ வெங்கடேசன்;*
*ஆகாயத்திற்கப்பாலிருக்கிறது*
*சுவர்க்கம்.*

அன்னமாச்சார்யா, உலக நாடகக் காட்சியில், தன் பங்கை முழுத்திறமையுடன் செய்தார் என்பது திண்ணம். குறிப்பிட்ட காலம் வந்தவுடன், ஆழ்ந்த மன நிறைவுடன், நாடகமேடையிலிருந்து இறுதியாக வெளியேறினார்.

# 3. நன்றிப் பாடல்கள்

மனித வாழ்வில் ஆட்சி செலுத்தும் தெய்வீகச் சக்திகளைக் குறித்து இயற்றப்பட்ட துதிப் பாக்களில், ரிக் வேதத் துதிப் பாடல்கள் மிக்க தொன்மையானவை. அச்சக்திகளை நோக்கி இறைஞ்சியவர்கள், துதிப்பாடல்களை, முதலில் உள்ளக் கிளர்ச்சி யுடன் சொன்னார்கள். அப்பாடல்களைப் பாடினால், கடவுள்களை இன்னும் ஆனந்தமாக வழிபட முடியுமென்று உணர்ந்தனர். ஆகையால், அவர்கள் துதிப்பாடல்களுக்கு இசை அமைத்து, ஸாமவேதத்தை உண்டாக்கினர். பிரமன், ஸாமவேதத்திலிருந்து தான், இசைக்கலையையும், இசையைக் கையாளவேண்டியதில் உள்ள நுணுக்கங்களையும் பிரித்தெடுத்தார் என்று, பரதருடைய நாட்டிய சாத்திரம் கூறுகிறது. நாகரிகம் மலர ஆரம்பித்த காலத்திலேயே, இசையின் வலிமை, பக்திக்கு உற்சாகமூட்டும் உபகரணமாகப் போற்றப்பட்டது. கண்ணன், அர்ஜுனனிடம், "நான் வேதங்களில் ஸாம வேதமாக இருக்கிறேன்" என்று சொல்லும்பொழுது, பக்திக்கும், இசைக்குமுள்ள நெருங்கிய உறவில், தன் நம்பிக்கையை வலியுறுத்துகிறார்.[17]

பாகவத புராணத்தில், ப்ரஹலாதனைப் பற்றிய கதையில், ஒன்பதுவித வழிபாடு முறைகளில், திருமாலுடைய பெருமை களைப் பாடுவது, மிகப் பொருத்தமாகச் சொல்லப்பட்டிருக் கிறது.[18] கலியுகம், பல குறைகளுள்ளதாயிருந்தாலும், அதன் தலையாய ஒரு சிறப்பு என்னவெனில், அதில், மனிதன், கண்ணனுடைய பெருமைகளைப் பாடியே விண்ணுலகத்தை யடையலாம் என்று, பக்தியின் சிறப்புப் பற்றிக் கூறும், அந்த நினைவில் கொள்ளத்தக்க நூல் கூறுகிறது.[19] பக்தி இயக்கமும், பிரார்த்தனைக் கூட்டங்களின் பாரம்பரியமும், இறைவனைப் பாடி வழிபடும் வழக்கத்தை, நாடு முழுவதும் பரப்பியது. தென்னகத்தில் உள்ள திருமால் கோயில்களில், ஆழ்வார்களின் பாசுரங்களைக் கட்டாயமாக இசைக்க வேண்டும் என்ற வழக்கம், கவிஞர்களை, மற்ற தென்னக மொழிகளிலும், பக்திப்பாக்கள் புனையத் தூண்டியது. கர்நாடகத்தின் துறவிக் கவிஞர் ஸ்ரீபாதராயா, ஸ்ரீரங்க பட்டணத்துத் திருமால் கோயிலில், ஆழ்வார்களின் பாசுரங்களைக் கேட்டதுதான், அவர், கன்னடத்தில், துதிப்பாடல்கள் இயற்று வதற்கு ஓரளவு காரணமாயிருந்தது எனக் கூறப்படுகிறது. ஸ்ரீபாதராயா, ஆழ்வார்கள் முதலியோருடைய துதிப்பாடல்

களையும், இசைக் காவியங்களையும் நன்கு அறிந்த அன்னமாச் சார்யா, தெலுங்கில், முதல் பாடலாசிரியரானார்.

சார்ங்கதேவர், தன்னுடைய ஸங்கீத ரத்னாகரத்தில், பாடலை இயற்றிப் பாடுபவர், ஒரு பாடலின் சொற்களையும், இசையையும் உண்டாக்குபவர் என விளக்கம் கூறுகிறார். பாடலை இயற்றுபவரும், அதற்கு இசையமைப்பவரும் அவரே. ஆகையால் 'உபயகாரர்', அதாவது, பாடல், இசை, இரண்டையும் படைப்பவர் எனப் பெயர் பெற்றார். அன்னமாச்சார்யா, பல்லாயிரக்கணக்கான பக்திப் பாடல்களை இயற்றிப் பாடியதோடல்லாமல், பக்திப் பாடல்கள் பற்றி "ஸங்கீர்த்தன லக்ஷணம்" என்ற நூலை வடமொழியில் இயற்றி, தன் போதனைகள் மூலமும், போதனைகளை வாழ்வில் கடைப்பிடிப்பது மூலமும், தெலுங்கில் பக்திப் பாடல்கள் இயற்றும் பல சந்ததியினருக்கு ஊக்கமளித்தார்.

சின்னண்ணா, தன் தாத்தாவைப் பற்றி எழுதிய வாழ்க்கைச் சரிதத்தில், அன்னமாச்சார்யா, பல ஆண்டுகளில் முப்பத்தி ரண்டாயிரம் பாடல்கள் இயற்றினார் என்று திட்டவட்டமாகக் கூறுகிறார். இந்த எண்ணிக்கை, நம்பத் தகுந்ததில்லையாயினும், பல காரணங்களுக்காக, அவருடைய கூற்று மிகையானதென்று தள்ளிவிட முடியாது. பதினாறாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு செப்பேடு சாஸனத்திலிருந்து, அன்னமாச்சார்யா பதினாறு வயதாயிருக்கும்பொழுது, தன் அன்பார்ந்த தலைவன் ஸ்ரீ வெங்கடேஸ்வரருடைய காட்சி பெற்று, புனிதமாக்கப்பட்டார் என்று அறிகிறோம். அவ்வானந்த அனுபவம், தான் வாழும்வரை, ஒவ்வொரு நாளும், ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் பெருமைகளைப் பறை சாற்றும் பாடல் ஒன்றாவது இயற்றவேண்டுமென்ற உறுதி பூண, அவரைத் தூண்டியது. ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் காட்சி பெற்ற பிறகு, அநேகமாக எண்பது ஆண்டுகள் வாழ்ந்தார். அவர் சார்ந்த திருப்பதிக் கோயில், பல மதச் சடங்குகளுக்கும், விழாக்களுக்கும், கேளிக்கைக் காட்சிகளுக்கும் பெயர் பெற்றது. இக்கோயில் பற்றித் தெலுங்கிலுள்ள 'நித்ய கல்யாணம், பச்ச தோரணம்' (எப்பொழுதுமே விழாக்கோலம், பச்சைத் தோரணங் கள்) என்ற கூற்று உண்மையானதே. பச்சைத் தோரணங்களும், மாவிலைகளும், அங்கு எப்பொழுதும் பார்க்கலாம். ஏனென்றால், எந்நாளும் அங்கு விழாநாள்தான். ஸ்ரீ வெங்கடேஸ்வரருக்காக நடத்தப்படும் எல்லா நிகழ்ச்சிகளிலும், அன்னமாச்சார்யா ஆர்வத்

தோடு பங்கேற்று, விழாக்களைக் காணும்போது, அவ்வப்பொழுது பாடல்களைப் பாடி, தான் கண்ட நிகழ்ச்சிகளைக் கொண்டாடிச் சிறப்பித்தார். அவர், ஒவ்வோர் ஆண்டும், பிரம்மோத்ஸவம் நடக்கும்பொழுது, எங்கு தங்கியிருந்தாலும், திருப்பதிக்கு வந்து, விழாவில் கலந்து கொள்வார். அவர் பாடிய பாடல்கள், விழாவை யொட்டி ஏற்பாடு செய்யப்பட்ட ஊர்வலங்களை வருணிக்கின்றன என்று சின்னண்ணா கூறுகிறார். மேலும், அஹோபலம், விஜய நகரம் போன்ற இடங்களை அவர் அடிக்கடி பார்வையிட்டார். அக்கோயில்களிலுள்ள கடவுள்களைப் பற்றியும், அஹோபலம், விஜயநகரம் செல்லும் வழியிலுள்ள கோயில்களிலுள்ள கடவுள் களைப் பற்றியும், பாடல்கள் புனைவார். ஒவ்வொரு பாடலின் இறுதிப் பகுதியிலும், எல்லாக் கடவுள்களையும், ஸ்ரீ வெங்கடேஸ்வரராகப் பாவித்துப் போற்றி, முடிக்கத் தவறமாட்டார். அவருடைய நீண்ட வாழ்நாளில், ஏழு குன்றுகளின் தலைவனின் பாடலாசிரியர் என்ற முறையில், பல நாட்களில், ஒன்றுக்கு மேற் பட்ட பாடல்களைப் பாடினார் என்று எண்ணுவது நியாயமானதே.

அன்னமாச்சார்யாவின் மகன், பெரிய திருமலாச்சார்யாவும், ஒரு சிறந்த பாடலாசிரியர். அவர், அன்னமாச்சார்யா இயற்றிய பாடல்களின் சிறப்பை, நன்கு அறிந்திருந்தார். அரிய பொக்கிஷ மான அப்பாடல்களையும், தன் பாடல்கள் சிலவற்றையும் செப் பேடுகளில் செதுக்கிப் பாதுகாப்பதில், அவர் அக்கறை கொண்டார். செப்பேடுகளை, கோயில் கொத்தளத்திலுள்ள "ஸங்கீர்த்தன பண்டாகரா" (துதிப்பாடல்களின் பொக்கிஷம்) என்ற சிறிய அறை யில் சேகரித்து வைத்தார். அங்கு காணப்படும் சில சாஸனங்கள், செப்பேடுகளைப் பாதுகாக்கவும், பல சிறப்பு வழிபாட்டுக் காலங்களில், பாடகர்களுக்குச் சன்மானம் அளித்து, அவர்களைக் கோயிலில் பாடச் சொல்லவும், பெரிய திருமலாச்சார்யா நன் கொடை அளித்ததாகக் குறிப்பிடுகின்றன.

தெலுங்கு இலக்கியத்தைப் பொறுத்த வரையில், இலக்கிய நூல்களை, அவைகளைப் பாதுகாப்பதற்காகச் செப்பேடுகளில் செதுக்குவது என்ற வழக்கம், தாள்ளபாக்கா குடும்ப உறுப்பினர் களிடம்தான் காணப்பட்டது. நாடு முழுவதையும் எடுத்துக் கொண்டால் கூட, இவ்வாறு இலக்கியங்களைச் செப்பேடுகளில் செதுக்குவது, ஒரு அசாதாரணமான வழக்கமாகத் தெரிகிறது. புத்த சமய நூல்கள், சாயனரின் வேதங்களைப் பற்றிய விளக்க உரை

போன்றவைதான், பண்டைய காலத்தில், செப்பேடுகளில் செதுக்கப்பட்டிருக்கின்றன.[20] பாடல்களைச் செப்பேடுகளில் செதுக்க, நிறைய பணம் தேவைப்படும். பெரிய திருமலாச் சார்யாவின், அரச பரம்பரையைச் சேர்ந்த ஆதரவாளனான, விஜய நகர சாம்ராஜ்யத்தின் அரசன், அச்யுததேவ ராயாவின் கொடையினால், தாள்ளப்பாக்கா கவிஞர்கள், செப்பேடுகளில் தங்கள் பாடல்களைச் செதுக்குவது சாத்தியமாயிற்று.

அன்னமாச்சார்யா பாடல்கள், இரு நூற்றாண்டுகளுக்கு மேலாக, மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்தன என்பதற்கு ஆதாரமிருக்கிறது. திருப்பதி கோயிலிலும், பிரார்த்தனைக் கூட்டங் களிலும், தெற்கே, தொலைவிலுள்ள, புதுக்கோட்டையில் நடை பெற்ற பிரார்த்தனைக் கூட்டங்களிலும், அன்னமாச்சார்யாவின் பாடல்கள் பாடப்பட்டன. ஆனால், விளக்கமுடியாத சில காரணங் களினால் அவைகள் வழக்கத்திலிருந்து மறைந்தன. துறவிக் கவிஞரும் மறக்கப்பட்டார். இதற்குப் பாமர நடையில் பாடல்கள் எழுதிய ஓர் ஆசிரியர், தங்கள் கவனத்திற்குரியவரல்ல என்று தெலுங்கு அறிஞர்கள் கருதி, அன்னமாச்சார்யாவைப் பற்றி மௌனம் சாதித்துச் சதிசெய்தது, ஒரு காரணமாயிருக்கலாம்.

திருப்பதியில், செப்பேடுகளில், அவருடைய பாடல்கள் இருக்கின்றன என்பதையேகூட மக்கள் மறந்துவிட்டனர். செப் பேடுகளைப் பற்றிய முதல் செய்தி, முன்னூறு ஆண்டுகள் கழித்து, பத்தொன்பதாம் நூற்றாண்டில், இங்கிலாந்தைச் சேர்ந்த அரசு ஊழியர் ஒருவர் எழுதிய குறிப்பிலிருந்து கிடைக்கிறது. 1816ஆம் ஆண்டில், சென்னையிலிருந்து வெளியிடப்பட்ட ஒரு தெலுங்கு இலக்கண நூலிற்கு முன்னுரையாக ஏ.டி. கேம்பெல் கூறுகிறார்: "ஒரு அந்தணக் குடும்பத்தினரால் பக்தியுடன் கூடிய அக்கறையுடன், சுமார் ஓராயிரம் செப்பேடுகளில், கவிதைகள் செதுக்கப்பட்டு, புனிதக் குன்றின் மேலுள்ள திருப்பதிக் கோயிலில், பாதுகாக்கப்படுகின்றன என்பதைக் கேள்விப்பட்டு, ஒரு இந்தியரை, அவைகளைப் பரிசீலனை செய்வதற்காக அனுப்பினேன். ஆனால், இலக்கணத்தைப் பற்றிய ஒரு நூல் நீங்கலாக, (இதன் நகல் ஒன்று பிறகு எடுக்கப்பட்டது), அங்கிருந்த சேகரிப்பில், மிகப்பெரும் அளவில், திருமாலைப் பற்றிய துதிப் பாடல்கள் தவிர, வேறொன்றும் இருந்ததாகத் தெரியவில்லை".[21]

செப்பேடுகளை உடைமையாக்கி, அவைகளின் நகல்களை எடுத்து, சிறந்த அறிஞர்களைக் கொண்டு அவைகளைப் பதிப் பித்து, பல புத்தகங்களாக வெளியிடுவதற்கு, ஸ்ரீ வெங்கடேஸ்வரர் கோயிலைப் பராமரிக்கும் திருப்பதி திருமலை தேவஸ்தானத்திற்கு, நூறு ஆண்டுகள் பிடித்தன. சேகரிக்கப்பட்ட பாடல்களை பதிப்பிக்கும் பொழுது, வரிசையாக எண்ணிக்கையிடப்பட்ட, பல செப்பேடுகள் காணாமற் போயிருந்தது கண்டுபிடிக்கப் பட்டது. இறுதியாக, 14,358 பாடல்களே கண்டுபிடிக்கப்பட்டன. பத்தொன்பதாம் நூற்றாண்டில், அவைகள் கண்டுபிடிக்கப்பட்ட பின்பு, அவைகளைப் பாதுகாக்க, ஒரு நிறுவனத்திடமிருந்து, மற்றொரு நிறுவனத்திற்கு மாற்றியதில், அன்னமாச்சார்யா எழுதிய பாதிக்கு மேற்பட்ட பாடல்கள், எதிர்கால சந்ததியினருக்குக் கிடைக்காமல் போய்விட்டன.

அன்னமாச்சார்யாவின் பாடல்களை, இரண்டு பொதுவான பிரிவுகளாகப் பிரிக்கலாம். காதல் பாடல்கள், ஆன்மீகப் பாடல்கள். பாடல்களின் பாவம், அவைகள் சொல்லும் செய்தி, இவைகளைக் கருத்தில் கொள்ளாமல், பாடல்கள் செதுக்கப்பட்ட செப்பேடுகள் எல்லாவற்றிலும், 'ஸங்கீர்த்தனா' (புனிதப்பாடல்) என்ற முத்திரை யிருப்பதால், அவைகள், பக்தியை அடிப்படையாகக் கொண்டவை என்று தெளிவாகத் தெரிகிறது. 'கீர்த்தனை', 'ஸங்கீர்த்தனை' என்ற சொற்கள், நேரிடையாகவோ, நுட்பமாகவோ, கடவுளின் பெருமை களையோ, மரியாதைக்குரிய ஞானிகளுடைய பெருமைகளையோ சிறப்பித்துக் கூறுகின்றன. பக்திப் பாடல்கள் எளிய இசையையும், சீர் முறையையும் கையாள்கின்றன. ஏனென்றால், அவைகளில், இசையைவிடச் சொல்லப்படும் கருத்தே முக்கியம். அம்மாதிரிப் பாடல்கள், உணர்ச்சி, எண்ணங்களின் விரிவான பரிமாணத்தை அளவிடுகின்றன. அவைகள், கடவுளிடமுள்ள ஆழ்ந்த பக்தியைப் பற்றி மாத்திரம் சொல்லவில்லை. மனிதனுக்குத் தன் சாதனை களிலுள்ள வீண் கர்வத்தையும், காலத்தின் விரைவில் ஓடி மறையுந்தன்மையையும், முக்தியடைவதற்கு உடனடி செய்ய வேண்டிய, கடவுளிடம் தஞ்சம் புகுதலின் அவசியம் பற்றியும் கூறுகின்றன.

பாகவத புராணம் எவ்வளவு தொன்மையானதோ, அவ்வளவு தொன்மையானது, இந்திய இலக்கியத்தில் காணப்படும், கடவு ளைக் காதலனாகக் கருதி அவனிடம் காதல் செய்யும் பாடல்கள்.

பாகவத புராணம், கண்ணனுடன் பிருந்தாவனத்தைச் சேர்ந்த கோபிகள் புரியும் காதல் விளையாட்டுக்களைக் கவி நயத்துடன் வருணிப்பதன் மூலம், மனித ஆன்மா கடவுளிடம் செலுத்தும் ஆழ்ந்த அன்பை உருவகமான கதையாகச் சொல்லுகிறது. கண்ணன், கோபாலன் (பசுக்களை மேய்ப்பவன்) என்று போற்றப் படுகிறான். இச்சந்தர்ப்பத்தில், பசுக்கள், தன்னிகரில்லாக் கடவுளிடத்து ஈர்க்கப்படும் மனித ஆன்மாக்களை நுட்பமாகக் குறிக்கின்றன. கோபிகளுள் முக்கிய பாத்திரமான இராதையின் பெயர் பாகவத புராணத்தில் சொல்லப்படவில்லை. ஆனால், கோபிகள், கண்ணனுடன் நடத்தும் களியாட்டங்களை வருணிக்கும்பொழுது, கோபிகளில் ஒருத்தி, கண்ணனுக்கு மிகவும் பிடித்தமானவள் என்ற குறிப்பு இருக்கிறது.

பாகவத புராணத்தில் ராஸ-பஞ்சாத்யாயி என்ற பிரிவில் காணப்படும் மேற்கூறிய குறிப்புகளிலிருந்து தோன்றியதுதான், கண்ணனும், இராதையும் ஈடுபட்ட காதல் விளையாட்டுகளை அடிப்படையாகக் கொண்ட, கடவுளுக்கும், பக்தனுக்குமிடையே யுள்ள, நாயகன்-நாயகி உறவு முறை. இவ்வுறவு முறையை வருணித்துப் பாடும் பாடல்கள், இந்தியக் கவிதையுலகில் பல நூற்றாண்டுகளாக வெள்ளப் பெருக்கெடுத்து ஓடுகின்றன. கவிதை இலக்கியத்தைப் பற்றிய வைணவ நூல்கள் 'மதுர ரஸம்' என வருணிக்கும் இக்காதல் உணர்ச்சி, கடவுள் பக்தி, தூய்மை யடைந்து காதலாகக் கனிவதே. இதனுடைய சிறப்பை விளக்கும் பொழுது அரவிந்தர் கூறுகிறார்: "ஆன்மாவுக்குக் கடவுளின் மீதுள்ள பற்று, இராதையும், கண்ணனும், திரும்பத் திரும்ப ஈடுபடும், உணர்ச்சிமிக்க காதல் விளையாட்டுகளில், இராதை, கண்ணன் என்ற சங்கேதப் பாத்திரங்களாக உருவெடுக்கின்றன. மனித ஆன்மா, தெய்வீக ஆன்மாவைக் காதல் மூலம் அடைய விரும்பு கிறது. அவ்வாறு அடைய முயலும்பொழுது, தெய்வீகத்தின் அழகினால் பற்றப்பட்டு, அடக்கியாளப்பட்டு, மந்திரசக்தியுள்ள புல்லாங்குழல் இசையினால் கவரப்பட்டு, பொறுப்புகளையும், கடமைகளையும், இத்தீவிர உணர்ச்சிகாக விட்டுவிட்டு, இசையின் பல கட்ட அசைவுகள் மூலம், கடவுளுடன் இணையும் ஆனந்தத்தை அனுபவித்து, அவரிடமிருந்து பிரிவதனால் ஏற்படும் துன்பத்தை அனுபவிக்கிறது. மறுபடி, கடவுளிடம் இணைவதற்குத் துடிக்கும் முடிவில்லா ஆசையினால் வாடி, மறுபடி கடவுளுடன்

இணைந்திருப்பதே, கடவுளிடம், மனித ஆன்மாவுக்குள்ள அன்பையும், அது புரியும் விளையாட்டையும் விளக்குவதாகும்".[23]

இறைவனுடன் புரியும் காதல் பற்றிப் பாடல்கள் இயற்றும்பொழுது, புனிதத் தன்மையற்ற காதல் உணர்ச்சி, புனிதமாகிறது, வல்லமை படைத்த காம உணர்ச்சி, ஆழ்ந்த ஆன்மீகத் தூண்டுதலாக மாறுகிறது. சுசீல் குமார் டே, இதுபற்றி, இவ்வாறு விளக்குகிறார்: "இம்மனோநிலை, கடவுளிடம் காதல் கொண்டு, அவரையே நினைந்து, அவரை அடைய முடியும் என்ற அவாவைத் தெரிவிக்கிறது. இந்த அவா, இவ்வுலகத்திற்கே உரிய, வெறி கலந்த உணர்ச்சியின் அந்தரங்க மொழியில் வெளிப்படு கிறது. ஏனென்றால், கடவுளின் காதலை, மனித உணர்ச்சிக்குப் பிரதிபலனாகக் கருதுகிறது.[24] இம்மனோநிலை, சமயம், காதல், கலை உணர்வு ஆகியவைகளின் அடிப்படைக் கொள்கைகளை ஒருங்கிணைப்பதுடன், நேர்த்தியான இறவாப் பாடல்களைப் படைப்பதன் மூலம், இலக்கியத்தை வளப்படுத்துகிறது".

அணியிலக்கணம் அறிந்தோர், இலக்கியக் கொள்கைகள் பற்றிய தங்களது விரிவான விவாதத்தில், உணர்ச்சிகளுள், காதலுணர்ச்சிக்குத் தலைமையிடம் கொடுத்திருக்கின்றனர். காம உணர்ச்சியால் கட்டுண்ட பல்வகைப்பட்ட நாயகன், நாயகிகள் பற்றி அவர்கள் எடுத்துரைக்கின்றனர். பண்டைய மரபையொட்டி எழுதப்பட்ட, இந்திய நாடகங்கள் பற்றிக் கோட்பாடுகள் வகுப்போர், மனோ தத்துவ முறைப்படி நிர்ணயிக்கப்பட்ட, எட்டு விதமான நாயகன்-நாயகி உறவு பற்றி, விரிவாக வருணிக்கின்றனர். அவை யாவன:

ஸ்வாதீன படிகா : காதலனைத் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கும் காதலி.

வாஸக ஸஜ்ஜிகா : காதலனை எதிர்பார்த்து, தன்னையும், தன் படுக்கையறையையும் அலங்காரம் செய்யும் காதலி.

விரஹோத்கண்டிதா : குற்றம் செய்த காதலன் வராததால் ஏமாந்திருக்கும் காதலி.

விப்ரலப்தா : வேண்டுமென்றே, தன் காதலனால் துரோகம் செய்யப்பட்ட காதலி.

கண்டிதா : காதலனின் உடம்பில், நேர்மை கெட்டதின் அடையாளச் சின்னங்களால், சினம் கொள்ளும் காதலி.

கலஹாந்தரிதா : காதற் சண்டையில், பிடிவாதத்தின் காரணமாய், காதலனிடமிருந்து பிரிக்கப் பட்டிருக்கும் காதலி.

ப்ரோஷிதபார்த்ரிகா : வெளிநாடு சென்றிருக்கும் காதலனுக்காக ஏங்கும் காதலி.

அபிஸாரிகா : வெளியில் சென்று, ஒரு குறிப்பிட்ட இடத்தில், தன் காதலனைச் சந்திக்கும் காதலி.

அன்னமாச்சார்யா, பாகவத புராணத்திலும், கீத கோவிந்தத்திலும்,[25] விவரிக்கப்பட்டிருக்கும், கோபிகள்-கண்ணன் காதல் விளையாட்டுக்களைப் பற்றி அறிந்த அளவு, பண்டைய கால அணியிலக்கணம் அறிந்தோர் எழுதிய நூல்களில், நாயகிகள் வகைப்படுத்தியிருப்பது பற்றியும் அறிந்திருந்தார். அவருடைய காதல் பாடல்களில், எட்டுவகை நாயகிகளுக்கும், எளிதில் உதாரணங்கள் காணலாம். உண்மையில், தங்கள் காதலர்களுடன், காதல் உணர்ச்சியால் பிணைக்கப்பட்டிருக்கும், காதலிகளின் மேற் கூறிய எட்டுவித மனோதத்துவ நிலைகளைப் பற்றிய வருணனை களையும், அன்னமாச்சார்யா பாடல்களில் காணலாம். அவருடைய இலக்கியப் படைப்பு அவ்வளவு வளமானது. அவர், சிறப்பெய்திய தன் முன்னோர்களின் காதல் பாடல்கள் பற்றிய கொள்கைகள், அவர்கள், அவைகளைக் கையாண்ட முறைகள் பற்றி அறிந்திருந்தார் என்பது தெளிவாகத் தெரிந்தாலும், சில சமயம், நாயகியின் மனோநிலையை வருணிக்கும்பொழுது, அவர்கள் அடைந்த எல்லையைத் தாண்டிச் சென்று, தன் சுய ஆற்றலை வெளிப்படுத்தினார். அவருடைய பாடல்கள், அவருக்குக் கடவுளிடமுள்ள காதலையும், அது நிறை வேறிய தையும், கடவுளின் பிரிவால் ஏற்பட்ட துன்பத்தையும், சேர்க் கையால் ஏற்பட்ட ஆனந்தத்தையும், பொருத்தமாக விளக்குகின்றன.

அவர் ஒரு பாத்திரத்தைப் பற்றியோ, ஒரு நிலைமையைப் பற்றியோ, வருணிக்கும்பொழுது, சில வழக்கமான உருவகங்களை

உபயோகப்படுத்தினாலும், இறுதியில், அவ்வுருவகங்கள், அவரது வளம் மிக்க கற்பனையில் ஒரு புதுப்பொலிவுடன் விளங்கின.

*பெண்ணின் இளமை,*
*அவள் தலைவனுடைய*
*மகிழ்ச்சி சாம்ராஜ்யத்தைக் காக்க,*
*ஒரு உண்மையான கோட்டை.*

*அவளுடைய ஓரப்பார்வையாகிற*
*மின்னலின் ஒளி,*
*அவனுடைய மனதைச்*
*சூழ்ந்திருக்கும் இருளைப் போக்கும்.*

*அவளுடைய வசீகர முகம்,*
*அவனுடைய அகலமான அல்லிக்கண்களை,*
*மலரவைக்கும்*
*ஒளி வீசும் அம்புலி.*
*வண்டுபோல் கருமையான*
*அவள் கூந்தலின் சுருள்கள்,*
*தன் தலைவனுக்குத்*
*தனிமை கொடுக்க,*
*இருள் போர்வையைப் பின்னுகின்றன.*

*அவள் மெல்லிய முன் கைகள்,*
*தலைவனின் கொடி போன்ற காதலுக்கு,*
*ஆதரவளிக்கும்,*
*மென்மையான*
*படர் கொடியின் பற்றுக் கூந்தல் போல் உள்ளன.*

*உருக்கிய பொன்னின் ஒளியையொத்த*
*தாமரை போன்ற அவள் முகத்தின் சிறப்பு,*
*ஸ்ரீ வெங்கடேசனின்*
*தயாள குணத்தைப்*
*பல இடங்களிலும்*
*பரப்புகிறது.*

*பெண்மான் கண் கொண்ட அந்நங்கையின் இதயம்,*
*காதல் கடவுளின் படைப்பு;*
*அது, கடவுளின் காம உணர்ச்சிக்கு,*
*ஊட்டமளிப்பதற்காகவே*
*திட்டமிடப்பட்டது.*

இப்பாட்டில், வழக்கமாக நாம் காணும், உருவகங்கள் நிறைய இருக்கின்றன என்பது தெளிவாயிருக்கிறது. உதாரணமாக, காதலியின் முகம், அம்புலியைப் போல் வட்டவடிவமாயும், ஒளி பொருந்தியதாயுமிருக்கிறது. காதலனின் கண்கள், நீரில் மலரும் அல்லி போல், நீண்டும், அகன்றுமிருக்கின்றன. அம்புலி, ஆகாயத்தில் ஒளி வீசத்துவங்குவதற்கும், அல்லி மலருவதற்கு முள்ள தொடர்பு, காலந்தொட்டுக் கையாளப்படும் ஒரு கவிதை இலக்கிய மரபு. இயற்கையான, கருத்துச் செறிவுள்ள இவ்வுறவு களைச் சொல்லி, அல்லி போலுள்ள ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் கண்களை, காதலியின் அம்புலி போன்ற முகத்தால் மலரச் செய்வதில், அன்னமாச்சார்யாவின் திறமை அடங்கியுள்ளது. கடவுளுக்குக் கூடச் சோர்வடையும் நேரமுண்டு. அவர் மனதில் நிறைந்திருக்கும் இருளை, அவருடைய தெய்வீக இல்லாளின் கண் பார்வையிலிருந்து வரும் ஒளிதான், விரட்டியடிக்க முடியும். இங்குமங்கும், பூவுலகக் காம உணர்ச்சி பற்றிய நுட்பக்குறிப்பு இருக்கிறது. இருந்தாலும் காதலர்களின் அடிப்படையான தெய்வீகத் தன்மையை முற்றிலும் மறக்க, இவ்வருணனை நம்மை அனுமதிக்கவில்லை.

பக்திப் பாடல்களில், காதல் உணர்ச்சியைப் புகுத்திய முதல் தெலுங்குப் பாடலாசிரியர், அன்னமாச்சார்யாதான். அவருக்குப் பின் வந்தவர்கள், அவரைப் பின்பற்றி எழுத முடிந்தது. ஆனால், அவர் துறையில் அவருக்கிருந்த கலைத்திறனை, ஒருவரும் மிஞ்சமுடியவில்லை. அவருடைய படைப்புகள் மிக அதிகம், அவருடைய கவிதைப் பார்வையின் வீச்சும் மிக அதிகம். ஆகையால், மனித அல்லது தெய்வீகக் காதலைப் பற்றிய எந்த மனவெழுச்சியும், ஏதாவது ஒரு பாடலில், நினைவு கொள்ளும் வகையில் அவரால் சொல்லப்படாமலில்லை. கடவுளிடமுள்ள தீவிர காதலினால் ஏற்படும் மனவலியாகட்டும், நிறைவேறு தலின் ஆனந்தமாகட்டும், அவ்வுணர்ச்சியின் ஆழத்தைக் கண்முன்

கொண்டு வந்து நிறுத்தும், தொடர்ச்சியான பல பாடல்களில், அவர் திறமையாகக் காட்டுகிறார். அக்காட்சிகள், நமக்குப் பழக்கப் பட்ட, பண்டைய மரபுக்காதல் கவிதைகளிலுள்ளவைகளிலிருந்து, முற்றிலும் மாறுபட்டவை. இவ்வுண்மை, அவருடைய புகழ்பெற்ற பாடலொன்றிலிருந்து தெளிவாகிறது. அது 'எலபடா' என்ற நாடோடிப் பாடல்களின் சீரை அடிப் படையாகக் கொண்டது. அது நாயகியின் ஆரம்ப மன வலியையும், இறுதியில் அவளுக்கு ஏற்படும் ஆனந்தத்தையும், பல பாக்களால் தெளிவாக வருணிக் கிறது. ஒவ்வொரு பாட்டும், அடுக்கடுக்கான, கவர்ச்சியான, வருணனைகளால் தீட்டப்பட்ட ஒரு சொல் லோவியம்.

*கூரை மீதிருந்து*
*உன்னைக் கவனித்துக் கொண்டு,*
*உன் காதலுக்கு*
*ஏங்குகிறேன்;*
*முனகிக் கொண்டே*
*நாட்களைக் கழிக்கிறேன்,*
*வெங்கடேசா!*
*எங்கு சென்றாய்*
*இவ்வளவு நேரம்?*

*மல்லிகைப் படுக்கையில்*
*புரண்டு கொண்டு,*
*உறக்கமில்லாமல்*
*இரவுகளைக் கழிக்கிறேன்,*
*உம்மைப் பாடிக்கொண்டு,*
*வெங்கடேசா !*
*கோடை நடுப்பகுதியின்*
*ஒரு நாளை நினைவுப்படுத்தும் வகையில்,*
*நிலவு ஒளி*
*சூடாக மாறிவிட்டது.*

*நேர்த்தியான உன் மோதிரத்தை,*
*பூரிக்கும் உன் மார்பில்*
*அழுத்திக் கொள்ளும் பொழுது,*

*வெங்கடேசா !*
*அது,*
*ஒட்டுவதற்கு உபயோகப்படும்,*
*உருக்கிய மெழுகின்மேல் குத்தப்படும்*
*முத்திரைபோல்,*
*ஒரு தெளிவான குறியை*
*விட்டுச் செல்லுகிறது.*

*வசந்த காலத்தில்,*
*மாந்தோப்பிலிருந்து*
*குயில் கூவுவதை நான் கேட்ட பொழுது,*
*உன் குரலென்று நினைத்தேன்,*
*வெங்கடேசா !*
*உன்னை என் அருகே வா என்று*
*அழைத்தேன்.*

*குட்டையிலுள்ள*
*தாமரை மலர்களை*
*உன் கண்கள் என்று நினைத்துக் கொண்டு,*
*அவைகளை அணுகிய பொழுது*
*வெங்கடேசா !*
*அவைகள்,*
*காதல் கடவுளின் அம்புகளாக*
*மாறிவிட்டன.*[26]

*நாம் ஒருமுறை பகிர்ந்து கொண்ட,*
*தித்திக்கும் காதல் சொற்கள்,*
*இப்பொழுது,*
*சுவரில்லாச் சித்திரங்களாகிவிட்டன,*
*வெங்கடேசா!*
*அவை, என் மனதில்,*
*உறுதியாக,*
*நிலைத்துவிட்டன.*

*புறா ஒன்றின் மூலம்*
*காதல் குறிப்பு ஒன்று*
*உனக்கு அனுப்புகிறேன்;*
*கடவுளிடம், ஆர்வத்துடன் வேண்டுகிறேன்,*
*வெங்கடேசா !*
*நீ*
*இங்கு*
*விரைவிலேயே*
*கொண்டு வரப்பட வேண்டுமென்று.*

*முழு இதயத்துடன்*
*உன் சொல்லை நம்புகிறேன்;*
*உன் கருணையை என் மீது பொழி,*
*வெங்கடேசா !*
*குவியும் இருளை*
*உடனே விரட்டியடி.*

*இறுதியாக நீ*
*என்னுடன் இணைந்தாய் !*
*உன் அன்பை என் மீது சொரிந்தாய்,*
*வெங்கடேசா !*
*உண்மையாகவே,*
*அதுதான், என் ஆன்மாவுக்கு விருந்து.*

காதலன் பிரிவினால் ஆழ்ந்த துக்கத்தை அனுபவிக்கும் காதலி, இந்திய இலக்கியத்தில் நமக்குப் பழக்கப்பட்ட ஒரு பாத்திரம். அவளுடைய பார்வை, நடத்தையைப் பற்றி, பல கவிதை மரபுகள் வளர்ந்திருக்கின்றன. காதல் தீயினால் அவள் எரியும் பொழுது, நிலா ஒளியும், மெல்லிய காற்றும் கூட அவள் வேதனையை அதிகரிக்கிறது. மலர் அம்புகளால் தன்னைத் துன்புறுத்தும் காதல் கடவுளுக்கு, அவளுடைய கடுமையான வசைமாரி காத்திருக்கிறது. அவள் பூவுலகைச் சேர்ந்தவள். உலக இன்பங்களில் ஈடுபாடு உள்ளவள். அவளை வியக்கத்தக்க வகையில் படைப்பது இயலாது. ஆனால், துறவிக் கவிஞரான அன்னமாச்சார்யா போன்றவர், கடுமையான மதச் சடங்குகளை நிறைவேற்றுவோரில் காணப்படும் பண்புகளை அவளுக்கு

ஊட்டி, மிருக இச்சைகளிலிருந்து, அவளை விடுவித்து, ஆன்மீகத்தின் உச்சிக்கே, அவளை உயர்த்த முடியும்.

*இந்த ஆசியை விட,*
*இந்தக் கட்டுப்பாட்டைவிட,*
*இந்தச் சிறப்பைவிட,*
*பெரியதாக எது இருக்கமுடியும்?*

*இளமாதின் வாழ்க்கை பயனுடையது;*
*யோகத்தில் சிறந்தவள் போல்,*
*பயனில்லாப் பற்றுகளை*
*அவள் அறுத்து விட்டாள்;*
*அவளுடைய ஆசைகள் அடங்கி ஒடுங்கிவிட்டன;*
*அவைகள்,*
*சீரான விவேகத்தின்,*
*தெளிவான குறிகளால்,*
*அடையாளமிடப்பட்டிருக்கின்றன.*

*தன் தலைவனிடத்திலுள்ள,*
*இடைவிடா*
*பிணைப்பு காரணமாக,*
*அவள் இதயம்,*
*நிலையான உள்ளக் கிளர்ச்சியின்,*
*இருப்பிடமாய்த் திகழ்கிறது;*
*தாமரையிலைகள் போன்ற கண்களை உடைய மாது*
*தன் மனதை அடக்கியாள முடியும்,*
*அமைதியடைய முடியும்.*

*இடைவிடாது, ஸ்ரீ வெங்கடேஸ்வரர் மீது*
*மனதை ஒரு நிலைப்படுத்தி,*
*தன் தெய்வீகத் தன்மையைப் பற்றிய அறிவை*
*அவள் அடைந்துவிட்டாள்;*
*அம்மாது,*
*தன்னிகரில்லாத் தலைவனின் கருணையினால்,*
*சூழப்பட்டிருப்பதால்,*
*அவள் மனம்,*
*இடைவிடா அமைதியினால்*
*நிரப்பப்பட்டிருக்கிறது.*

இப்பாடலின் வருணனையிலிருந்து, அது, காதலனிடமிருந்து பிரிதலால் ஏற்படும் துன்பத்தை, அவள் அனுபவிக்கிறாள் என்று அறிவது கடினம். ஏனென்றால், வழக்கமாகக் காதலனின் பிரிவினால் ஏற்படும் துக்கத்தின் அறிகுறிகள், இப்பாடலில் எங்கும் காணப்படவில்லை. அவள், இடைவிடாக் கடவுளைப் பற்றிய நினைவால், மதச்சடங்குகளின் கடைசிக் குறிக்கோளான, கடவுளுடன் ஆன்மீக இணைப்பை அடைய முடிந்தது என்று, இப்பாடல் நுட்பமாக அறிவிக்கிறது.

உணர்ச்சி வெள்ளத்திலிருக்கும் நாயகியின் நிலையை வருணிக்கும் மற்றொரு பாடலில், அன்னமாச்சார்யா, நாயகி, தன் தலைவனிடமிருந்து பிரிந்த நிலையில் உள்ளாள் என்று தெளிவாகக் கூறுகிறார்.

*அது வியப்புதான் !*
*அந்த இளமாதின் பார்வையில்*
*பிரிவின் அறிகுறிகள்*
*தென்படவே இல்லை.*

*அவள் உன்னைப் பற்றி நினைக்கும்பொழுது,*
*நீ அவள் கண்முன் தெரிய,*
*அவள் வெற்றிடத்தைத் தழுவிக் கொள்கிறாள்;*
*ஐயமில்லை,*
*அவள் யாரோ ஒருவரிடமிருந்து*
*நீ சூனியத்திலுமிருக்கிறாய் என்று*
*அறிந்துவிட்டாள்.*

*அவள் உன் பெருமைகளைப் பாடும் பொழுது,*
*உன் உருவத்தைக் கண்டு கொள்கிறாள்;*
*திறந்த வெளியை நீண்ட நேரம் பார்க்கிறாள்;*
*நீ எல்லா திக்குகளிலும்*
*பரந்திருக்கிறாய் என்று*
*யாரோ ஒருவரிடமிருந்து*
*அவள் கேள்விப்பட்டிருக்க வேண்டும்.*

*சொல்லாலும், எண்ணத்தாலும்,*
*அவள், எப்பொழுதும்,*
*உன்னிடம் குடி கொண்டிருப்பதால்,*

*அவளை உன் கைகளால் அணைத்துக் கொண்டாய்;*
*ஏ வெங்கடாத்ரித் தலைவனே !*
*நீ எங்கும் பரவியிருக்கிறாய் என்ற உண்மையை,*
*நாங்கள் இப்பொழுது உணருகிறோம்.*

இப்பாடல், காதலனிடமிருந்து பிரிந்த ஓர் இள நங்கையின் நடத்தையை வருணிப்பதால், காதல் பாடல் என்று வகைப் படுத்தப்படுகிறது. ஆனால், இது ஆன்மீக வளர்ச்சியில் முதிர்ச்சி யடைந்த ஒரு பக்தையின் மனநிலையை எடுத்துக்காட்டுகிறது. இவ்வாறான பாடல்களில், மனிதர்களிடையே ஒருவருக்கொருவர் இருக்கும் அன்பையும், மனிதர்களுக்குத் தெய்வத்திடமுள்ள ஆர்வத்தையும் பிரிக்கும் கோடு எவ்வாறு மறைந்து விடுகிறதோ, அவ்வாறே காதல் உணர்விற்கும், ஆன்மீக உணர்விற்குமுள்ள வேறுபாடு, மறைந்து விடுகிறது. இங்கு, நாம் ஒன்று கவனத்தில் கொள்ள வேண்டும். நாடோடிப் பாடல்களின் இசையையும், சீரையும் அடிப்படையாகக் கொண்ட, செப்பேட்டில் செதுக்கப் பட்ட, அன்னமாச்சார்யாவின் சில பாக்கள், 'சிருங்கார கீர்த்தனலு' (காதலுணர்வை வெளிப்படுத்தும் பாடல்கள்) என்ற முத்திரை யைத் தாங்கி நிற்கின்றன. இப்பாக்கள், ஆழ்வார்களுடைய புனிதமான பரம்பரையையொட்டி, கண்ணன் சிறுவனாக இருந்த பொழுது செய்த சேட்டைகளை, அன்புடன் விவரிக் கின்றன.

இயற்கையாகவே, அவருடைய ஆன்மீகப் பாடல்களின் (அத்யாத்ம கீர்த்தனலு) எண்ண வீச்சு மிக அதிகம். அவை, பலவித ஆன்மீக விஷயங்களான, திருமாலிடமுள்ள பக்தியின் சிறப்பு, தஞ்சம் புகுதலின் பயன், உலக சாதனைகளிலுள்ள வீண் பெருமை, உண்மையான பக்தனின் ஆசீர்வதிக்கப்பட்ட நிலை, தந்தை நிலையிலிருக்கும் கடவுள், தேவையில்லா, இனமத வேறுபாடுகளைக் கடந்து நிற்கும் எல்லா மக்களின் சகோதரத் தன்மை, ஆகியவை பற்றி பேசுகின்றன. தன் தலைவனிடம், கவிஞனுக்குள்ள உறவின் மாறும் நிலைகளை, அவை, அவ்வப் பொழுது படம் பிடித்துக் காட்டுகின்றன. அன்னமாச்சார்யா உலகம் எங்கும் பரந்திருக்கும் ஸ்ரீ வெங்கடேஸ்வரரை, ஈடில்லா, பரம் பொருளாகப் போற்றினார். இப்பொழுது, அவரைப் புகழ்கிறார், இப்பொழுது அவரைத் தொழுகிறார், சில சமயங்களில் அவருடன் சண்டையிடுகிறார், உடனே அவருடைய மன்னிப்பைக்

கோருகிறார், சில சந்தர்ப்பங்களில், அவரை ஏளனம் செய்யவும் தயங்கமாட்டார். அன்னமாச்சார்யாவுக்குத் திருமாலிடமுள்ள நெருக்கம் அத்தகையது. அவருக்குத் திருமாலிடமுள்ள எல்லை யில்லா அன்பு எப்படி அவருடைய பாடல்களில் தெரிகிறதோ, அவ்வாறே, கடவுளிடம், நிபந்தனையில்லாமல், அவர் தஞ்ச மடைந்திருப்பதும் தெரிகிறது. அப்பாடல்களில், அவர் வெளிப் படுத்தும் உணர்ச்சி, பக்தி மாத்திரம் அல்ல. அது, எல்லையில்லாத, தீவிர, நெருங்கிய உறவு. நாரத முனிவர், பக்தியைப் பற்றிய தனது புகழ்பெற்ற விளக்கத்தில், பக்தி, கடவுளின் மிக உயர்ந்த அன்பைப் போன்றது என்று கூறுகிறார். இந்த பக்தி எத்தகையது என்று அன்னமாச்சார்யா பாக்களிலிருந்து அறியலாம்.

கடவுளை அடையப் பலவழிகள் உள்ளன. விசிஷ்டாத்வைத சமயப் பிரிவைப் பின்பற்றிய அன்னமாச்சார்யா, கடவுள் என்ற குறிக்கோளையடைய, எளிய வழியான தஞ்சம் புகுதலைச் சிறப்பித்துக் கூறுகிறார். தஞ்சம் புகுதல் எளிமையாகக் கடைப் பிடிக்கக்கூடியது, அது தவறாது பயனளிக்கும் என்று அவர் பல பாடல்களில் வலியுறுத்துகிறார். கடவுளை அடையும் மற்ற முறைகள், நம் குறிக்கோளை நிறைவேற்றலாம். ஆனால், அன்னமாச்சார்யா காட்டும் முறையிலுள்ள எளிமையும், அம்முறை யின் மூலம் கிடைக்கப்பெறும் அருளும், மற்ற முறைகளிலில்லை.

*அடிமரம் இருக்கும் பொழுது,*
*ஏன் ஒருவன்*
*மேலேயுள்ள இலைகளுக்குத்*
*தண்ணீர் எடுத்துச் செல்லவேண்டும்?*
*நீ என் இதயத்தில்*
*குடி கொண்டிருக்கும் பொழுது,*
*மற்ற பொருள்கள் பற்றி*
*நான் ஏன் அக்கறை கொள்ளவேண்டும்?*

*சிலர்*
*வேதங்கள் காட்டிய வழியைப்*
*பின்பற்றுகிறோம்*
*எனக் கூறுகின்றனர்;*
*ஆனால், வேதங்கள்,*
*உன்னுடைய பெருமையின்*
*பல்வேறு முகங்கள்.*

*சிலர்,*
*இவ்வுலக வழக்கங்களைக்*
*கடைப்பிடிப்பதாகக்*
*கூறுகின்றனர்;*
*ஆனால், எல்லா உலகங்களும்,*
*உன் மாயையின் வல்லமையால் ஏற்பட்ட*
*பொருள்களே.*

*சிலர்,*
*தங்கள் இதய ஆசைகளை*
*ஒடுக்க முயற்சிக்கின்றனர்;*
*உன்னுடைய விருப்பத்தினால்தான்,*
*ஆசைகளும் எழுகின்றன என்பதை*
*அவர்கள் உணரவில்லை.*

*மற்ற சிலர்,*
*உடலையும், புலன்களையும்,*
*அடக்கப் போராடுகின்றனர்;*
*உடலும், புலன்களும்,*
*அன்புத் தலைவனே!*
*உன்னுடைய படைப்புகள்தானே;*
*இந்த எளிய குறிக்கோளையடைய*
*ஏன் ஒருவன்*
*இங்குமங்கும் ஓடவேண்டும்;*
*தண்ணீரால் நிரம்பியிருக்கும்*
*ஒரு சிறுகுளம் அருகிலிருக்கும்பொழுது,*
*காய்ந்த ஆற்றுப் படுகையில்*
*ஏன் ஒருவன் தோண்ட வேண்டும்.*

*கருணையுள்ள தலைவனே!*
*ஸ்ரீ வெங்கடேசா!*
*நான் உன்னிடம் தஞ்சம் புகுந்துவிட்டேன்;*
*பக்திச் சந்தையிலுள்ள*
*பலவித முறைகள் பற்றி,*
*நான் ஏன் அக்கறை கொள்ள வேண்டும் ?*

கருணையுள்ள தலைவன் திருமாலின் பாதங்களில் தஞ்சம் புகுந்த, விவேகமுள்ள மனிதனின் மகிழ்ச்சியான நிலை,

அன்னமாச்சார்யாவுக்குப் பிடித்த பொருள். நம்பிக்கையூட்டும், உதவிக்கரம் கொடுக்கும், கடவுளிடம் தஞ்சம் புகும் தத்துவத்தின் செய்தியை, துன்பமுறும் மக்களுக்குச் சொல்ல வேண்டுமென்ற ஆர்வத்தில், பல பாடல்கள் இயற்றினார்.

*தலைவன் திருமாலிடத்தில்*
*நம்பிக்கை வைப்பவன்,*
*விசனப்படக் காரணமேயில்லை;*
*ஏனென்றால், கருணையுள்ள திருமாலின் இல்லாள்*
*கணவரை எல்லாவிதத்திலும்*
*பாதுகாக்கிறாள்.*

*சிந்தனை மிக்க எசமானனின்*
*பணியாள்,*
*ஒருவிதத்திலும்*
*மனம் கலங்குவதில்லை;*
*நல்ல மனிதனுடைய மனைவி*
*முரண்பாடறியாள்.*
*தந்தை கவனமாயிருக்கும் பொழுது*
*மகனுக்குக் கவலையில்லை.*
*நிலம், நிறைய தானியங்கள், அளிக்கும் பொழுது,*
*பற்றாக் குறைவிராது.*

*வல்லமை மிக்க அரசன்,*
*விரோதிகளைக் கண்டு அஞ்சான்;*
*செல்வத்தினால் ஆசீர்வதிக்கப்பட்ட ஒருவனுக்கு,*
*இல்லையென்பதில்லை.*

*நன்னடத்தையுள்ளவன்*
*பாவத்தின் கரையறியான்;*
*இதயத் தூய்மையுள்ள ஒருவனுக்கு,*
*எத்தீங்கும் வராது.*

*ஆன்மீகத்தைக் கற்பிக்க*
*ஆசான் உள்ள ஒருவனுக்கு,*
*ஒரு குறையும் கிடையாது;*
*விண்ணுலகையடைவது பற்றி*
*நிச்சயமாயிருப்பவன்,*
*மாயைகளால் துன்புறுத்தப்படமாட்டான்.*

*நம் நலத்தைக் காக்க,*
*ஸ்ரீ வெங்கடேஸ்வரர்*
*நம்முடனிருக்கிறார்;*
*அவர்களுடைய பணியாட்களான நாம்,*
*கட்டுப்பாடுகளறியோம்.*

அன்னமாச்சார்யாவின் கற்பனை, உலகில் காணும் தெய்வசக்தியை பல பழக்கப்பட்ட முறைகளில் போற்றிப்பாராட்டு வதிலும், அன்றாட நடவடிக்கைகளுக்குச் சமய சம்பந்தமான பல அர்த்தங்கள் கற்பிப்பதிலும், மிகத் திறனுடையதாயிருக்கிறது. உதாரணமாக, அவருடைய பாடல்கள் ஒன்றில், ஸ்ரீ வெங்கடேஸ் வரரைச் சேலைகள் நெய்து விற்பவராகக்காட்டுகிறார்.[27] சேலைகள் நெய்து விற்பது, கிராமங்களில் நாம் அன்றாடம் காணும் காட்சி. ஆனால், இத்தெய்வத் தொழிலாளியின் சேலை நெய்யும் முறை, அவன் நெய்வதற்கு உபயோகிக்கும் பொருள்கள் போல், அசாதாரணமானவை.

இப்பொழுது ஒன்று சொல்லலாம். அன்னமாச்சார்யாவின் சொந்தக் கிராமமான தாள்ளபாக்கத்தைச் சுற்றியுள்ள பகுதி, காலங்காலமாக, திறமைமிக்க நூல் சேலைகள் நெய்வோருக்குப் பெயர் பெற்றது. அவர்கள், ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் தெய்வ இல்லாள், அலர்மேல் மங்கை, தங்கள் குடும்பத்தில் பிறந்தவள், தங்களுக்குத் தமக்கையென்று, ஸ்ரீ வெங்கடேஸ்வரருடன் உறவு கொண்டாடுகின்றனர். மேலும் பெரிய திருமலாச்சார்யாவின் காலத்திலிருந்து கிடைக்கும் குறிப்புகளின்படி, தாள்ளபாக்கா குலத்தின் உறுப்பினர்கள், அவர்களுடைய ஆன்மீக ஆசான்களாக இருந்து, அவர்களிடமிருந்து, அவ்வப்பொழுது மரியாதைகளும், தாராளமாகப் பரிசுகளும் பெற்றனர் என்றும் தெரியவருகிறது.

*தன் சரக்குகளை விற்பதற்காக*
*நிழலில் செல்லும்*
*அச்சேலைகள் நெய்பவர்*
*ஒவ்வொரு தெருவிலும்*
*காணப்படுகிறார்.*

*ஐந்து அடிப்படை இயற்கைச் சக்திகளை*
*பல்வண்ணப் பஞ்சு நூலாகத் தெரிந்தெடுத்து,*
*நூல்களை,*

*மெதுவாகத் தட்டுகிறதான சலனபுத்தியால்*
*முறுக்கேற்றி,*
*தீவிர ஆசைகளை,*
*இலேசான கதிர்களில் சுற்றுகிறார்;*
*விற்பனைக்காக*
*மிக நேர்த்தியான சேலைகளை*
*உருவாக்குகிறார்.*

*அவருடைய இல்லாள்,*
*மாயையாகிற பொன்போன்ற சொட்டுகளைத்*
*தெளிக்கும் பொழுது,*
*அவர் நேர்மையற்ற செயல்களாகிற*
*மடிப்புகளை இணைத்து,*
*உழவுகால்கள் போன்ற வரிகளுள்ள*
*சேலைகளை*
*வடிவமைக்கிறார்.*

*மக்களின் சந்தையில்,*
*அவர்*
*உலக வாழ்க்கையென்ற ஆடைகளை,*
*விற்பனைக்குக் கொணர்கிறார்;*
*அவரவர்களுடைய*
*முற்பிறவி வினைகளுக்குத் தக்கவாறு*
*ஆடைகளின் விலையை நிர்ணயிக்கிறார்;*
*இவ்வல்லமை படைத்த தலைவர், ஸ்ரீ வெங்கடேஸ்வரர்,*
*கைத்தறி ஆடைகளை விற்போருக்கு நண்பர்;*
*ஆடைகளை உருவாக்கி,*
*அவைகளை, அவர் விருப்பம்போல்*
*விற்கிறார்.*

**உலகச் சந்தையில் கடவுள் பலவித ஆடைகள் விற்பவர். அவரால் படைக்கப்பட்ட மனிதர்கள், ஆடைகளை வாங்குவோர். உலக இன்பங்கள், அனுபவங்கள், விலைக்கு விற்கப்படும் ஆடைகளாகும். ஒருவன் பெறும் ஆடையின் தரமும், அவன் அதற்குக் கொடுக்கும் விலையும், அவனுடைய முற்பிறவி வினைகளையே பொருத்தது. மேலும், இந்த பேரம், தெய்வீக ஆடை விற்பவனுடைய விருப்பம், மகிழ்ச்சி, இவைகளைப்**

பொறுத்தே, நடைபெறுகிறது. இவ்வாறு, கவிஞனுடைய கற்பனை, ஒரு எளிய தொழிலாளியை, ஒருவனுடைய முற்பிறவிப் பயன்களுக்குத் தக்கவாறு பலன் கொடுக்கும் கடவுளாகக் காட்டுகிறது. இந்த உருவணியை, அன்னமாச்சார்யா, மனித வாழ்க்கையின் பல நிலைகளை விளக்குவதற்கு உபயோகிக்கிறார்.

உலகில் பிறவி எடுத்தவர்களுக்கு, அவர்கள் முற்பிறவிக்குத் தக்கவாறு பலன்களையளிப்பதில், கடவுள் கடுமையாகவும், முறைப்படியும், நடந்து கொள்ளலாம். ஆனால் பக்தர்களிடம் அவருக்கு இருக்கும் உறவு வேறு விதமானது. அன்னமாச்சார்யா, கடவுளிடம் தனக்கிருக்கும் அந்தரங்கத்தைப் பற்றிக் குறிப்பிட்டு, பக்தர்களுடன், கடவுள், பேரம் பேசினால், பக்தர்களுடைய கையே மேலோங்கி நிற்கும் என விளையாட்டாகக் கூறுகிறார்.

*நீங்கள் அக்கலையை அறிய மாட்டீர்கள்*
*தலைவனே!*
*நாங்கள் உங்களிடமிருந்து*
*நிறைய பயனடைகிறோம்;*
*நிச்சயமாக,*
*உங்களுடைய பக்தர்கள்,*
*உங்களைக் காட்டிலும்,*
*மதிநுட்பமுடையவர்கள்.*

*பக்தியை மட்டும் உபயோகித்து,*
*நாங்கள் உங்களைப் பிடித்துக் கொண்டிருக்கிறோம்;*
*உங்களை,*
*இதயத்தில், இறுக்கப் பிடித்துக் கொண்டிருக்கிறோம்;*
*ஒரு கூடை துளசி இலைகளை,*
*உங்கள் பாதங்களில் வைத்து,*
*நாங்கள் உங்களிடமிருந்து*
*எங்கள் முக்தியை வாங்குகிறோம்;*[28]
*தலைவனே,*
*நிச்சயமாக,*
*உங்கள் பக்தர்கள்*
*மித லாபநோக்குடன்,*
*பேரம் பேசுவதில்*
*மதிநுட்பமுடையோர்!*

*நீங்கள் படைத்த பொருள்களை,*
*உங்களிடம் கொண்டு வந்தே,*
*உங்களுடைய எல்லையற்ற கருணையை,*
*எங்களால் பெற முடிகிறது;*
*உங்களுக்கு-வணக்கங்கள் செலுத்தி,*
*எங்களுடைய சுமைகளையெல்லாம்,*
*உங்களிடம் மாற்றி விடுகிறோம், தலைவா!*
*உங்களுடைய பணியாட்கள்,*
*மதிநுட்பத்திற்குப்*
*பெயர் பெற்றவர்கள்.*
*ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வந்து,*
*அதிலிருந்து ஒரு கையளவு தண்ணீர் எடுத்து,* [29]
*உங்கள் மீது தெளிக்கிறோம்;*
*நாங்கள் உங்களிடமிருந்து*
*கேட்ட வரங்களைப் பெறுகிறோம்;*
*அம்மாதிரி கலைகளில்,*
*உங்கள் பக்தர்கள்*
*உங்களை மிஞ்சுகின்றனர்;*
*அவர்கள், உங்களைவிட,*
*நிச்சயமாக மதிநுட்பமுடையவர்கள்.*

திருமாலுடைய சிறந்த பண்புகளில் ஒன்று, அவர் எல்லோரும், எளிதில் அணுகும்படி இருப்பதுதான் என்று, விசிஷ்டாத்வைத சமயப்பிரிவு கூறுகிறது.[30] அச்சமயத்தின் முக்கிய விரிவுரையாளரான, இராமானுஜர், திருமால், அவரைத் தஞ்சம் புகுந்தோருக்கு, தாயன்பே உருவான கருணைக் கடல் என்று புகழ்கிறார். அன்னமாச்சார்யா, திருமாலின் இப்போற்றத்தக்க பண்பைத் தெளிவாகத் தெரிகிற ஒரு குறையாக எடுத்துக் கொண்டு, திருமாலுடைய பக்தர்கள், வணங்குதல் போன்ற எளிதான செயல்களால், அவரை மகிழ்வித்து, பயன்களைப் பெறுகின்றனர் என்று வேடிக்கையாகக் கூறுகிறார். கடவுளுடைய மதிநுட்பக் குறைவை சுட்டிக் காட்டுவது, உண்மையில் அவருக்குப் பக்தர்கள் நலனில் இருக்கும் அக்கறையை எடுத்துக் காட்டும், சிறந்த புகழுரை. இப்பாடல், இந்தியக் காவியங்களைப் பற்றிய நூல்களில் குறிப்பிடப்படும், வ்யஜாஸ்துதி சொல்லலங்காரத்திற்கு, அதாவது, குற்றங்களைக் கண்டுபிடிக்கும் பாவனையில், புகழ்ச்சி செய்வதற்கு, ஒரு நல்ல உதாரணம்.

சற்று வழக்கத்திற்கு மாறான, மேற்கூறப்பட்ட பாடலின் மனப்பாங்கிலேயே பாடப்படும் மற்றொரு பாடலில், அன்னமாச் சார்யா, வினைப்பயன்களைப் பற்றிப் பேசும் பொழுது, கடவுளைக் குற்றம் சொல்லுவது போல், அவர் பெருமைகளைப் பாடுகிறார். எல்லோருமறிந்த, இந்துக்களின் மத நம்பிக்கைகளுக்கு ஆதாரா மான, வினைப்பயன் கொள்கைக்கொப்ப, ஒருவனுக்கு, இப் பிறவியில் எது நேரிடினும், அது முற்பிறவியில் செய்தவைகளின் விளைவு என்று கருதப்படுகிறது. ஏனென்றால், அவனுடைய ஆன்மா, அடுத்தடுத்துப் பிறவியெடுக்கும்பொழுது, நற்செயல்கள் இன்பத்தைக் கொடுக்கின்றன, தீய செயல்கள், விசனத்தையும், துன்ப அனுபவங்களையும் உண்டு பண்ணுகின்றன. ஒரு மனிதனின் முற்பிறவிச் செயல்களே, அவனுடைய தற்கால, எதிர்கால அனுபவங்களை நிர்ணயிக்கின்றன என்று, வினைப் பயன் பற்றிய கொள்கை கூறுகிறது. அன்னமாச்சார்யா, இக்கொள் கையை, ஸ்ரீ வெங்கடேஸ்வரருக்கே பிரயோகிக்கிறார். கடவுள், தன்னுடைய தெய்வீகத்தின் சிறப்பை அறிவிப்பதற்காக, மனிதன், தன் வினைப்பயன்களை அனுபவிப்பது அவசியமாகிறது என்று, வினைப்பயன் நியதியிலுள்ள நம்பிக்கையைப் பற்றி விளை யாட்டாகப் பேசுகிறார். எந்த ஒருவனுடைய விருப்பத்திற்கேற்ப, எல்லா உலகுகளும், அவைகளிலுள்ள உயிரினங்களும், உண்டா கின்றனவோ, அந்த இறைவன், வினைப்பயன் கொள்கைக்கு அப்பாற்பட்டவன். அன்னமாச்சார்யா இதை நன்கு அறிவார். ஆனால், நண்பன் என்ற முறையில், தன் தெய்வத் தலைவனு டைய சிறப்புகளை, குறைபாடுகளென்று பரிகாசம் செய்கிறார்.

*முற்பிறவியின் விளைவுகளிலிருந்து*
*யார் தப்ப முடியும்?*
*நீங்கள் கடவுளாக இருந்தாலும்,*
*உங்களுடைய தவறான செயல்களுக்காக,*
*துன்பம் அனுபவிக்கத்தான் வேண்டும்.*

*உலகிலுள்ள மக்களை,*
*கரடு முரடுகள் நிறைந்த*
*குடும்பத்தின் பந்தங்களில்,*
*சிக்கவிட்ட பாவத்தால்,*

*நீங்கள் கடவுளாக இருந்தாலும்,*
*உங்கள் மார்பில்,*
*ஒரு மாதைத் தூக்கிக் கொண்டிருக்கிறீர்கள்.*

*ஒரு காரணமில்லாது,*
*உயிரினங்களை,*
*வாழ்க்கைக் கடலில்,*
*அமுக்கி எழ வைப்பதால்,*
*நீங்கள் கடவுள்களுள் முதல்வராக இருந்தாலும்,*
*பெரிய கடல் அலைகளின் மீது*
*தூங்க வைக்கப்படுகிறீர்கள்.*

*எங்களுடைய வாழ்க்கைத் தேவைக்காக,*
*எங்களை,*
*குன்றுகளையும், குளங்களையும் நோக்கி,*
*ஒய்வில்லாது,*
*விரட்டுவதால்,*
*நீங்களும்,*
*முணுமுணுக்காது,*
*குன்றுகளின் மத்தியில்,*
*வசிக்கிறீர்கள்;*
*நீங்கள்*
*குளத்தின் தலைவர் என்று*
*போற்றப்படுகிறீர்கள்.*

ஸ்ரீ வெங்கடேஸ்வரர், ஸ்ரீநிவாஸன் என்று போற்றப் படுகிறார். ஏனென்றால், அவருடைய தெய்வ இல்லாள், செழிப் பிற்கும், சுபத்திற்கும் தலைவியான கடவுள், இலக்குமி, எப்பொழு தும் அவர் மார்பில் வீற்றிருந்து, அவரிடம் வசித்து, அவருடைய மேன்மைக்குச் சிறப்பூட்டுகிறார். இவ்வாறே பாற்கடலில், சேஷ நாகத்தின் மேல் அவர் உறங்குவது, அவர் இன்பநிலையைக் காட்டும். இந்நிலை, அவருடைய தெய்வீகச் சிறப்பை விளக்கு கிறது. அவர், வேங்கடக் குன்றின் உச்சியை, பூவுலகில், சிலை வடிவில் தங்குவதற்குத் தெரிந்தெடுத்தது, அவருடைய வல்லமையையும், மேன்மையையும், அவருக்குத் தன்னுடைய பாதங்களில் அடைக்கலம் தேடி வருபவர்கள் மீதுள்ள எல்லையற்ற

இரக்கத்தையும், குறிக்கும். திருமாலின் கோயில் அருகிலுள்ள குன்றும், குளமும், அவைகளின் இயற்கையான புனிதத் தன்மை காரணமாக, நினைவுக்கெட்டாக் காலத்திலிருந்து, அவ்வப் பொழுது, அன்னமாச்சார்யா உள்ளிட்ட பல கவிஞர்களால், சிறப்பாகப் புகழப்பட்டிருக்கின்றன. கவிஞர் வேண்டுமென்றே ஈடுபடும் விளையாட்டுத்தனத்தில், கடவுளுடைய தெய்வீக மாட்சிமையைக் காட்டும், அடையாளங்கள், அவருடைய முற்பிறவியின் தகாத செயல்களால், துன்பங்களை அனுபவிப்பதற் கான அடையாளங்கள் என்று, திரித்துக் கூறவதில், பாட்டின் அழகு அடங்கியுள்ளது. அன்னமாச்சார்யாவுக்குத் தன் தலைவனுடன் உறவாடும் முறையிலுள்ள சுதந்திரம், மேற்கூறிய பாடலிலிருந்து விளங்குகிறது.

அன்னமாச்சார்யா, தனது பாடல்கள் ஒன்றில், பலர் வேதங்களைக் கற்றாலும், சிலர்தான் திருமாலைப் பற்றி அறிந்து கொள்கின்றனர் என்று கூறுகிறார். புராணங்களைப் படிப்பது மாத்திரம், ஒருவனுக்கு ஆறுதலளிக்காது. கடவுளின் புகழைப் பாடுவது, கலியுகத்தில் தோன்றிய முறையாகும். அது, வேதங்கள் கற்றோரும் முக்தியடைய, எளிதான வழியைக் காட்டுவது. கடவுளைப் பற்றிய துதிப் பாடல்கள், ஐந்தாவது வேதம், வெங்கடேஸ்வரரின் வேதம் என்று, அன்னமாச்சார்யா உறுதியாகக் கூறுகிறார். திவ்யப் பிரபந்தம் எனப்படும் ஆழ்வார்களின் துதிப்பாடல்களின் தொகுப்பு, வைணவர்களால், ஐந்தாம் வேதம் எனவும், திராவிட வேதம் எனவும் போற்றப்படுகிறது. இப்பின்னணி யைக் கொண்டு பார்த்தால், அன்னமாச்சார்யா, திருமாலைக் குறித்து இயற்றப்பட்ட துதிப்பாடல்களை, வெங்கடேஸ்வரரின் வேதம் எனக் குறிப்பிடுவது விளங்கும். அன்னமாச்சார்யா, திருமால் துதிப் பாடல்களை, வெங்கடேஸ்வரர் வேதம் எனக் குறிப்பிடுவது, அவருக்குப் பக்திப் பாடல்களிலுள்ள இறையுணர்வை எடுத்துக் காட்டுகிறது.

சிறு பிராயத்திலேயே, வாழ்க்கையின் நோக்கத்தைப் புரிந்து கொண்ட ஆசி வழங்கப்பட்ட ஆன்மாக்களில் ஒருவர், அன்னமாச்சார்யா. உலகின் பகட்டு, படாடோபம், மினுமினுப்பு, கண் கூசும் ஒளி, இவைகளில் மதி மயக்கம் கொள்ளாமல், தன் குறிக்கோளை அடைய முழுமனதுடன் முயன்றார். வாழ்க்கைக்கு இயற்கையான, இன்பத்தையும், துன்பத்தையும் அனுபவித்துக்

கொண்டு, முழு வாழ்க்கை வாழ்ந்தார். ஆனால், ஒரு கணமும், வாழ்க்கை என்பது சிறிது நேரம் தெரிந்து மறையும் ஒரு காட்சி, ஒரு நாடகக் காட்சி என்ற உண்மையை மறக்காமல் அவர் வாழ்ந்தார். தன்னுடைய பாடல்கள் ஒன்றில், அவர் உலகக் கவர்ச்சிகளை, சந்தையின் பகட்டுக்கும், இரவுப் பனிச் சொட்டுகளுக்கும் ஒப்பிடுகிறார். திருமாலிடம், பரிபூரணமாக, நிபந்தனையற்றுத் தஞ்சம் புகுவதே, மனிதன், தன்னுடைய சங்கடமான நிலையிலிருந்து, தப்பிப்பதற்குப் பாதுகாப்பானதும், எளிதானது மான வழி என்று அவர் நம்பினார். இவ்வுலகில், தன்னுடன் கூட வாழும் மனிதர்களின் விசன நிலை கண்டு, இரக்கமிகுதியால், அவர், நெஞ்சம் நெகிழ்ந்தார். தன்னுடைய பேரின்பத்தை, அவர் களுடன் பகிர்ந்து கொள்ள வேண்டுமென்று, அவருடைய உள் மனது, அவரை உறுத்தியது. ஆகையால், அவர் பல ஆயிரக் கணக்கான பாடல்களை இயற்றினார். தன்னுடைய சொற்கள், அவர்களுடைய கால்களுக்கு விளக்குகளாகவும், அவர்கள் செல்லும் பாதைக்கு ஒளியாகவும் விளங்கும் என அவர் நம்பினார்.

தன்னுடைய செய்தி, அரசனுக்கும், சாதாரண மனிதனுக்கும், அறிவாளிக்கும் படிப்பறிவில்லாதோனுக்கும், சென்றடைய வேண்டு மென்பதை அவர் உணர்ந்தார். ஆகையால், உபயோகத்தி லிருந்த எல்லாவிதமான பாட்டு வடிவங்களையும் தேர்ந்தெடுத்தார். பண்டைய மரபின் வழி வந்த இலக்கணக் கட்டுக்கோப்பான பாடலிலிருந்து, இலக்கணக் கட்டுக்கோப்புக் குறைவான, அசைந்து நெளிந்தாடும், நாடோடிப் பாடல்களின் அடிப்படையில மைந்த பாடல்கள் வரை, எல்லாவிதமான பாடல்களையும் கையாண்டார். இனிப்பான காதல் உணர்ச்சிமிக்க பாட்டிலிருந்து, கண்டிப்பான நிபந்தனைகளுடன் கூடிய துறவைப் பற்றிய பாடல் களையும், சில சமயங்களில் வெளிப்படையாகப் போதிக்கும் பாடல் களையும், மற்றும் சில சமயங்களில், நுட்பமான யோசனைகளைத் தெரிவிக்கும் பாடல் களையும் இயற்றினார். இனிமையாக ஒலிக்கும் இப்பாடல்களின் மூலம், தன் மனத்தில் சுமையாயிருந்த கீழ்க்கண்ட வேண்டுகோளை, அவர் உலகுக்கு அறிவித்தார்.

*"திருமாலின் அடிகளில்*
*தஞ்சம் புகுந்தால் போதும்;*
*எல்லாவற்றையும் அவரே கவனித்துக் கொள்ளுவார்".*

மேலும், அன்னமாச்சார்யா, இம்மையிலும், மறுமையிலும், பக்தர்களுக்குக் கடவுள் கருணை புரிவாரென்று உறுதி கூறுகிறார். இந்த உறுதியை விளக்கும் வகையில், அவர் கருத்தைக் கவரும் விளக்கமொன்று கொடுக்கிறார். ஸ்ரீ வெங்கடேஸ்வரருக்கு இரு மனைவிகள் - திருமகள், நிலமகள். ஸ்ரீ வெங்கடேஸ்வரர் உருவச் சிலை, திருவிழாக் காலங்களில் உலாவுக்கு எடுத்துச் செல்லப்படும் பொழுது, இரு பக்கங்களிலும், இரு மனைவிகள் புடைசூழ உள்ளார். திருமகள், விண்ணுலகக் கடவுளான இலக்குமியானதாலும், நிலமகள், பூவுலகைக் காக்கும் தாயானதாலும், பக்தர்களின் நலன் முழுக்கப் பாதுகாக்கப்படுகிறது என்று அன்னமாச்சார்யா ஊகிக்கிறார்.

*ஸ்ரீ வெங்கடேசா!*
*நீங்கள்*
*இரு மனைவிகளுடன்*
*உலா வருகிறீர்கள்;*
*திருமகள் ஒரு பக்கம்,*
*நிலமகள் மற்றொரு பக்கம்;*
*நாங்கள் இவ்வுலகிலும்,*
*விண்ணுலகிலும்,*
*செழிப்பாயிருக்க வேண்டுமென்ற*
*உங்கள் நோக்கம் பற்றி*
*என்ன சந்தேகம்!*

# 4. உயரிய பாரம்பரியம்

எந்த மொழி இலக்கியத்திலும், முதலில் செழிப்பாக வளருவது நாடோடிப் பாடல்களே. பிறகுதான், நவீனமுறையில், சீராக அமைக்கப்பட்ட அடிகளுடன் கூடிய செய்யுள்கள் தோன்றின. வாய்மொழி பாரம்பரியம், எப்பொழுதுமே, எழுதப்பட்ட நூல்களுக்கு முன்னோடி. அன்னமாச்சார்யாவின் பாடல்கள், மனிதனுடைய உலக வாழ்வின் எல்லா முக்கிய நிலைகளைப் பற்றி விளக்குவதோடல்லாமல், தொட்டிலிலிருந்து ஆரம்பித்து, இடுகாடு செல்லும்வரை, அவன் வாழ்க்கைப் பயணத்தில் நிகழும், முக்கிய நிகழ்ச்சிகளைப் படிப்படியாக விவரிக்கின்றன. ''பழமை யான, விசனமூட்டக்கூடிய, எப்பொழுதோ நடந்த நிகழ்ச்சிகள் பற்றி, மிகப் பழமையான போர்களைப் பற்றி'', அல்லது ''இப்பொழுது அனுபவித்துக் கொண்டிருக்கும், மறுபடியும் நிகழப்போகும், ஏதோ ஒரு இயற்கையான துன்பம், இழப்பு அல்லது மனவலி பற்றிய உணர்ச்சிகளை'', இப்பாடல்கள், நம் மனதை உறுத்தும் வகையில் எடுத்துரைக்கின்றன. எல்லாப் பாடல்களும் வருத்தம் தோய்ந்தவையாய் இல்லை. குழந்தை பிறத்தல் அல்லது திருமண நிகழ்ச்சியைப் பற்றிய சந்தோஷத்தை, உற்சாகமூட்டும் ஒரு பாடல், எடுத்துரைக்கும். போர்க்களத்திலடைந்த வெற்றி, வீர உணர்ச்சியும், நாட்டுப் பற்றும் ததும்பும் ஒரு கதையைக் கூறும் பாடலுக்குத் தூண்டுகோலாக அமையலாம்.

இதுதான், உண்மையில், தெலுங்கு இலக்கியத்தின் வரலாறு. வடமொழி பாரம்பரிய அடிப்படையில் எழுதப்பட்ட பண்டைய காலத்திய சிறந்த காவியம், பதினோராம் நூற்றா ண்டைச் சேர்ந்த, நன்னய்யா எழுதிய மஹாபாரதமு என்ற நூல் வடிவில், முதலில் தோன்றியது. அப்பொழுதே, சில காலமாக, உள்நாட்டுக் கவிதைப் பாரம்பரியம் வழக்கத்திலிருந்ததற்கு ஆதாரமிருக்கிறது. இப்பாரம்பரியத்தில், முக்கியமாகப் பல்வேறு பொருள்களைப் பற்றி, நாடோடிப் பாடல்கள் புனையப்பெற்றன. எளிய கிராமிய மெட்டுகளில் அவை பாடப்பட்டன. இரண்டுவித பாரம்பரியமும், சில காலம் செழித்து வளர்ந்ததாகத் தெரிகிறது. கற்றறிந்த கவிஞர்கள், வடமொழி பாரம்பரியத்தைப் பின்பற்றி, வடமொழிக் காவியங்களின் சீர்முறை, சொற்கள் அமைப்பு இவைகளைக் கையாண்டு, விரிவான வரலாற்றுக் கவிதைகள் எழுதினார். சாதாரண மக்கள், உள்நாட்டுப் பாரம்பரியத்தில்,

அந்தந்தப் பகுதிகளின் பேச்சு மொழியில், எளிய பாடல்கள் புனைந்தனர்.

பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த சைவக் கவிஞர், பாலகுருகி சோமநாதா என்பவர், இவ்வாறான பல பாடல்கள் பற்றி, தன்னுடைய ''பண்டிதராத்ய-சரித்ரமு'' என்ற கவிதையில் குறிப் பிடுகிறார். நாடோடிப் பாடல்களைக் குறிக்க, அவர் 'பதமு' என்ற சொல்லை உபயோகிக்கிறார். பல்வேறு நாடோடிப் பாடல்கள் பற்றிக் கூறுகிறார். அவையாவன: ''தும்மேத பதமுலு'' (வண்டை விளித்துப் பாடும் பாடல்கள்), 'ப்ரபாத பதமுலு'' (வைகறையுடன் சம்பந்தப்பட்ட பாடல்கள்), ''வெந்நெல பதமுலு'' (நிலாப் பாடல்கள்), ''நிவாலி பதமுலு'' (கடவுளின் முன் கற்பூரம் கொளுத்தி, ஆரத்தி எடுக்கும் பொழுது பாடும் பாடல்கள்). துரதிருஷ்டவசமாக, பெயர் தெரியாதவர்களால் இயற்றப்பட்ட இப்பாடல்கள் முழுவதும், பிற்காலச் சந்ததியினருக்குக் கிடைக்க வில்லை. ஏனென்றால், வாய்மொழியாகப் பரவுவதற்காக அவை கள் பாடப்பட்டன. அவைகளை எழுதிக் காப்பதில் ஒருவரும் அக்கறை செலுத்தவில்லை.

தெலுங்குப் பாடலுக்கு, ஒரு நல்வடிவம் கொடுத்து, அதைத் தன்னுடைய உயரிய எண்ணங்களாலும், தொழிற்திறமையாலும், இலக்கியமாக உயர்த்தக்கூடிய வாய்ப்பு, பதினைந்தாம் நூற்றாண் டைச் சேர்ந்த அன்னமாச்சார்யாவுக்குக் கிடைத்தது. இதன் காரணமாகவே, அவரையடுத்து வந்த கவிஞர்கள், அவருக்குப் 'பதகவிதா-பிதாமஹ'' (இசைக்காவியப் படைப்பாளி) என்ற மிகப்பொருத்தமான விருதை வழங்கினர். அவர், இலக்கியத்திற்கு மற்றொரு பணி செய்தார். தன்னுடைய 'ஸங்கீர்த்தன-லக்ஷணம்' என்ற வடமொழி நூலில், பக்திப் பாடல்கள் புனைவது பற்றிய கோட்பாடுகளை வகைப்படுத்திக் கொடுத்தார். 'பதமு' (பாடல்), 'ஸங்கீர்த்தன' (பக்திப் பாடல்), என்ற சொற்கள், தாள்ளபாக்கா கவிஞர்களால், ஒரே பொருளுடையதாகக் கருதப்பட்டதாகத் தெரிகிறது.

பலகாலமாக, வடமொழியில் ப்ரபந்தம் என்றொரு இசைக்காவிய வடிவம் இருந்து வந்திருக்கிறதென்று, பண்டைய நூல்கள் கூறுகின்றன. ராகம், தாளம், சொல் பொருள், சந்தர்ப்பம் இவைகளை அடிப்படையாகக் கொண்ட அவைகளின் அமைப்பும், தொழில் நுணுக்கங்களும் மாறுபட்டன. 'பதமு', 'ஸங்கீர்த்தன',

'கிருதி', என்று வகைப்படுத்தப்பட்ட பாடல்களுக்கு, பிரபந்தங்கள், முன்னோடிகள். அன்னமாச்சார்யா, சீரிய பிரபந்தங்கள் பற்றி நன்கு அறிந்திருந்தார். ஆனால், அவைகளுடைய கடினமான அமைப்பு களில் சிக்கிக் கொள்ளக்கூடாதென்று விவேகமாக முடிவு செய்தார். உள்நாட்டு மெட்டுகளை அடிப்படையாகக் கொண்ட தனது பாடல்களுக்கு, எளிய, தெளிவான வடிவமைப்பைக் கொடுத்தார்.

கிருஷ்ணமாச்சார்யுலு என்ற வைணவக் கவிஞர், பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில், தெலுங்கில், ''ஸிம்ஹகிரி நரஹரி வசனமுலு'' என்ற தொடர்ச்சியாக வரும் பக்திப் பாடல்களை இயற்றினார். அவைகளை, அவர் 'ஸங்கீர்த்தனமுலு' என்றும், 'த்யான-ஸங்கீர்த்தனமுலு' என்றும், அழைத்தார். ஸிம்ஹாசலம் ஸ்ரீ நரசிம்ஹரை விளித்து உணர்ச்சி ததும்பப் பாடப்படும் பாடல்கள் அவை. பாடுவதற்கு எழுதப் பட்டாலும், அவை, இன்னிசை இழைந்தோடிய வசனமொழிதான், பாடலின் வடிவத்தைப் பெறவில்லை. இதன் காரணமாக, அவை 'வசனப் பாடல்கள்' என்று வகைப்படுத்தப்பட்டன. அன்னமாச் சார்யா, அவைகளை அறிந்திருந்தார். ஆனால், தன்னுடைய பாடல்களின் வடிவமைப்பை உருவாக்குவதில் வசனப்பாடல் களுக்கு, அவர் சிறிதும் கடமைப்பட்டவரல்ல.

அன்னமாச்சார்யாவின் இசைக் காவியங்களின் வடிவமைப்பு, ஓரளவு கர்நாடகாவின் தாஸ கவிஞர்களால் உருவாக்கப்பட்டிருக் கலாம். பதினான்காம் நூற்றாண்டின் இறுதியில், அப் பகுதியில் துவக்கப்பட்ட ஹரிதாஸர் இயக்கமும், துறவிக் கவிஞர்களான நரஹரி தீர்த்தர், ஸ்ரீபாதராயா ஆகியோருடைய பக்திப் பாடல்களும், அன்னமாச்சார்யாவுக்குத் தெரிந்திருந்தன. அவர்கள், அன்னமாச் சார்யா தெரிந்தெடுத்த தொழிலுக்கும், அவரது பாடல்களின் வடிவமைப்புக்கும் காரணமாயிருக்கலாம் என்று நினைக்க இடமிருக்கிறது.

அன்னமாச்சார்யாவினால் உருவாக்கப்பட்ட பாடல்கள், இரண்டு பகுதிகளைக் கொண்டது. பல்லவி, சரணம். பல்லவி என்பது, மையக் கருத்தை ஓரிரு அடிகளில் விவரிக்கும் ஆரம்பக் கூற்று. அது திரும்பத்திரும்பப் பாடல் முழுதும் பாடப்படும். சரணம் என்பது பல்லவியைப் பின்பற்றி வரும் செய்யுள். அது, அநேகமாக நான்கு அடிகள் கொண்டதாக இருக்கும். அது, முக்கியக் கூற்றுக்கு, ஆதரவு தருவதாகவும், அதை விளக்கு

வதாகவும் அமையும். அநேக பாடல்களில், பாடலின் ஆரம்பத்தில் கூறப்பட்டுள்ள கோட்பாட்டை வலியுறுத்துவதற்காக, பல செய்யுள்கள் ஒன்று சேர்க்கப்பட்டிருக்கின்றன. அன்னமாச்சார்யா, ஒரு பாடலில் பல்லவியில் சுருக்கமாகச் சொல்லப்பட்டிருக்கிற கருத்திற்கு ஆதரவு தரும் வகையில், ஒன்றன்பின் ஒன்றாக வரும், மூன்று செய்யுள்களை சேர்க்கிறார். சில சமயம், மையக்கருத்தை, ஒரு வாக்கியத்தில், சுருக்கிக்கூற முடியாமல் போகும். அப்பொழுது, பல்லவிக்கும், முதல் சரணத்திற்கும் நடுவே, ஒரு கூடுதலான வாக்கியம் புகுத்தப்படுகிறது. இக்கூடுதல் வாக்கியம், அனுபல்லவி எனப் பெயர் பெறுகிறது. இக்கூடுதல் வாக்கியம் புகுத்தப் பட்டவுடன், பாடல், மூன்று பாகங்களைக் கொண்ட அமைப்பாக விரிவடைகிறது. தியாகராஜர், இவ்வாறு, மூன்று பகுதிகளை அமைப்பார். அன்னமாச்சார்யா, இரண்டு பகுதிகள் கொண்ட பாடல்களையே இயற்றினார். எப்பொழுதாவது தான், அவர் தனது பாடல்களில் அனுபல்லவியைப் புகுத்துவார்.

அன்னமாச்சார்யாவின் பெரும்பாலான பாடல்கள், இருபகுதி களைக் கொண்டவை. ஆன்மீகக் கருத்தை விளக்கும் பாடல்களில் ஒன்றான, கீழ்க்கண்ட பாடலை ஆராய்ந்து, இரு பகுதிகள் கொண்ட அவருடைய பாடலைப் பற்றி அறிந்து கொள்ளலாம்.

*உங்களுடைய பக்தர்கள் ஆசி வெள்ளத்தில் மூழ்கடிக்கப் பட்டிருக்கின்றனர்,*
*உங்களைப் போன்ற மற்றொரு கடவுளை நாங்கள் எங்கே காணமுடியும்?*

*உங்களுடைய விசுவாசமுள்ள பணியாட்களுக்குப் பாதுகாப்பு அளிக்க*
*நீங்கள் உயர்த்திய கையுடன் எப்பொழுதும் காத்திருக்கிறீர்கள்;*[32]
*உலகில், பாவத்தைக் கழுவும்,*
*உங்களுடைய மறைபொருளுள்ள நாமத்தை, எங்கும் பரவச் செய்கிறீர்கள்.*

*உங்களை அண்டும் பக்தர்களுக்குச் செல்வத்தை வழங்குவதற்காக,*
*நீங்கள், மார்பில் இலக்குமியைச் சுமக்கிறீர்கள்;*
*துன்புமுற்ற உயிர் வாழினங்களை புனிதப்படுத்தும் உறுதியுடன்,*
*உங்கள் பாதங்களிலிருந்து ஒரு நதியைப் பெருகச்செய்கிறீர்கள்.*

*உலகத்தை உயிர் வாழினங்களால் நிரப்புவதற்காக,*
*பிரமனை உங்கள் தொப்புளிலிருந்து கொணர்ந்தீர்கள்;*
*பல திசை களையும், இடைவிடாது காவல் காப்பதற்காக,*
*வேங்கடக் குன்றின் உச்சிமீது நிற்கிறீர்கள்.*

முதல் இரு அடிகளும் பல்லவி, பாடலின் முதற்பகுதி, பல்லவிக்குப் பிறகு, மூன்று, நான்கு அடிகள் கொண்ட செய்யுள்கள், காணப்படுகின்றன. தெலுங்கில் 'சரணமுலு' என்று அழைக்கப்படும், இச்செய்யுள்கள், இரண்டாவது பகுதியாக அமைகிறது.

ஸ்ரீ வெங்கடேஸ்வரரை விளித்துப் பாடும் மேற்கூறிய பாடல், அவருடைய எல்லையில்லாக் கருணையைப் புகழும் வகையில் அமைக்கப்பட்டிருக்கிறது. பக்தர்கள் மீது அவர் சொரியும் கணக்கிலடங்கா ஆசிகள், அவரை, கடவுள்களிடையே முதன்மை யாகக் காட்டுகிறது. இம்மையக் கருத்து, பல்லவியில் அழுத்தந் திருத்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கடுத்து வரும் செய்யுள்கள், திருமாலுடைய கருணையை, பக்தர்கள் மீது அவருக்குள்ள அக்கறையைக் காட்டும் சில நிகழ்ச்சிகள் மூலம் விரிவாக விளக்குவதற்காக, அமைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ் வொரு செய்யுளும், மேலும் இரு பகுதிகளாக, பிரிக்கப்படலா மென்பதைக் கவனிக்க வேண்டும். இரு அடிகளைக் கொண்ட ஒவ்வொரு பகுதியும், திருமாலின் கருணையை ருசுப்படுத்தும் நோக்கத்துடன் ஒரு நிகழ்ச்சியை வருணிக்கிறது. இவ்வாறாக முக்கியக் கோட்பாட்டுக்கு ஆதரவு தருவதற்காக ஆறு விளக்கங்கள் காணப்படுகின்றன.

(1) தன்னைத் தஞ்சம் அடைந்தோரைப் பாதுகாக்க, அவர் எப்பொழுதும் தயாராக இருக்கிறார். அவருடைய இந்த அக்கறை, நம்பிக்கையூட்டும் அவருடைய தூக்கிய கையினால் குறிப்பிடப்படுகிறது.

(2) உலகிலுள்ள விசனப்படும் உயிரினங்களைப் பாவங் களிலிருந்தும், துன்ப அனுபவங்களிலிருந்தும் விடு விக்க, தன்னுடைய புனிதப்படுத்தும் நாமாவையும், தன்னைப் பற்றிய மந்திரத்தையும், பரப்பச் செய்கிறார்.

(3) தன்னை நாடுவோருக்குச் செல்வம் கொழிக்க வேண்டும் என்ற வரத்தைக் கொடுக்கும் நிலையி லிருப்பதற்காக, மங்களத்தையும், செழிப்பையும் கொடுக்கும் கடவுளான, இலக்குமியை மார்பில் சுமக்கிறார்.

(4) எந்த கங்கை, அதில் நீராடும் மூவுலகிலுள்ளோரு டைய, குவிந்து கொண்டேயிருக்கும் பாவங்களைப் போக்குமோ, அந்த மிக்க புனிதமான கங்கையை, தன் பாதங்களிலிருந்து பெருக்கோடச்செய்கிறார். மக்கள் அதில் நீராடி, புனிதப்படுத்தப்பட்டு, முற்பிறவித் தீயசெயல் களிலிருந்து விடுபட வேண்டும் என்று அவர் அவ்வாறு செய்கிறார்.

(5) அவருடைய லீலைகளில் ஒன்றாகப் பிரமனைப் படைத்தார். பிரமன் உயிரினங்களைப் படைப் பவனாகச் செயல்பட்டு, தன் தலைவனின் லீலை களுக்கு ஊக்கமளிக்கும் வகையில், உலகங்களை உயிரினங்களால் நிரப்புகிறார்.

(6) அவர் குன்றின் உச்சியின் மேல் நின்று, பல திசைகளிலும் தன் பார்வையைச் செலுத்தி, பக்தர் களின் நலனைப் பாதுகாக்கிறார். பாடலின் இரண்டாம் பகுதியைச் சேர்ந்த மூன்று செய்யுள்களும், திரளாகச் சேர்ந்த ஒரு விளைவை உண்டு பண்ணி, திருமால் தான், கடவுள்களுள், மிக்க கருணையுள்ளவர், அவருடைய பக்தர்கள் எப்பொழுதும் தங்களை ஆனந்தத்திலேயே காண்கின்றனர் என்ற, முதற் கூற்றை முழுதாக விளக்குகின்றன. சொல்லிலக் கணத்தில் கீர்த்தனையென்பது, 'பெருமைகளைப் பாடுதல்' என்று பொருள்படும். அன்னமாச்சார்யாவின் பாடல்கள், அவரது பணியை நன்கு பயனளிக்கும் வகையில் செய்வதற்கு, மிகப் பொருத்தமான, 'கீர்த் தனைகள்' என்ற பெயருடன் விளக்குகின்றன. இக் காரணம் கொண்டே, அன்னமாச்சார்யாவின் காலத் தில் வாழ்ந்தோர், 'ஹரிகீர்த்தனாசார்ய' (திருமாலின் பெருமைகளைப் பாடும் கலையில் வல்லவன்) என்ற பொருத்தமான விருதை, அவருக்கு வழங்கினர்.

அன்னமாச்சார்யா வாழ்ந்த காலத்தில், வடமொழி பாரம் பரியத்தையொட்டி எழுதும் ஆசிரியர்கள், வடமொழி இலக்கியங் களை மொழி பெயர்ப்போர், அவைகளைத் தேவைக் கேற்ப மாற்றியமைத்து எழுதுவோர் ஆகியோரே, புகழுக்கும்,

செல்வத்துக்கும், உரியவராயிருந்தனர். எல்லோரும் புரிந்து கொள்ளக்கூடிய பாட்டுகளும், இசைக் காவியங்களும், அறிஞர் களாலும், விமரிசகர்களாலும், வெளிப்படையான வெறுப்புடன், ஏளனம் செய்யப்பட்டன. அக்காலத்திலும், அன்னமாச்சார்யா, உள்நாட்டுப் பாரம்பரியத்தில், பேச்சு வழக்கு நடைமுறையில், பக்திப் பாடல்களை இயற்றும் பாடலாசிரியராகவே இருந்தார். 'ஹரிகீர்த்தனாசார்ய'' (திருமாலின் பெருமைகளைப் பாடும் கலையில் வல்லவன்) என்று அழைக்கப்படுவதற்கு மேலான பெருமையோ, ஆசியோ இருப்பதாக, அவர் நினைக்கவில்லை. ஆயினும், அக்கால அறிஞர்கள், எளிய பக்திப்பாடலின் இலக்கியத்தரத்தைப் புறக்கணித்தது, அவர்களுடைய ரசனையை, பகுத்தறிவு பற்றிய குறைபாட்டைக் காட்டுகிறது. ஏ. கெலட்டி (A. Gelletti) என்ற ஆங்கில அரசு அதிகாரி, அக்காலப் பக்திப் பாடல்கள் பற்றிய தன்னுடைய கருத்துக்களில், இவ்வுண்மையைத் தெளிவாகக் கொணர்கிறார். தன்னுடைய ''கிராமியமும், இலக்கணமும்'' என்ற கட்டுரையில், அவர் இவ்வாறு கூறுகிறார்: ''மற்ற மக்களைப் பொருத்த மட்டில், மற்ற காலங்களில், பாடலிலிருந்துதான், இலக்கியத்தின் பொற்காலம் பிறந்திருக்கிறது. ஆந்திர மாநிலம், இயற்கையாக, இடைவிடாது, இனிமையாகப் பாடுகிறது. ஆனால், ஆந்திர இலக்கியம், தெலுங்குப் பாடலைப் புறக்கணித்து, வெறுத்துவிட்டது. அது, அன்னியயாப்பிலக் கணத்தை, இறக்குமதி செய்திருக்கிறது. அந்த கடன் வாங்கிய யாப்பிலக்கணத்தில், தெலுங்கு மொழி, பல கட்டுப்பாடு களிடையே, சிரமப்பட்டு நகருகிறது.

அக்காலத்தில், ஆந்திர மாநிலத்தில், வடமொழிப்படிப்பிற்கு, அசாதாரணமான பெருமை இருந்தது. ஆரம்பகால, தெலுங்கு இலக்கியத்தில், வடமொழிச் சாயல் இருந்தது. வடமொழி இலக்கியத்தின் பாரம்பரியம் மேலோங்கியிருந்தது. இதன் காரணமாக, அறிஞர்கள், பாமர நடையில் எழுதப்பட்ட தெலுங்கு பக்திப் பாடலை உயர்வாகக் கருதவில்லை. பக்திப் பாடல்கள், மகளிரையும், கிராமத்து மக்களையும் மகிழ்விப்பதற்குதான் பயன்படும் எனக் கருதி, அவைகள் தங்கள் கவனத்திற்குரியதல்ல என்று ஒதுக்கிவிட்டனர். அறிஞர்களின் இறுமாப்பு தெலுங்கிற்கே உரிய ஓர் அம்சம் போலும். மற்ற மொழிகளில், இசைக் காவியங்கள் இயற்றுவோருக்கு, ஒரு கௌரவமான இடம் அளிக்கப்பட்டது என்பது தெளிவாகிறது. உதாரணமாக, தமிழிலுள்ள ஆழ்வார்கள்,

நாயன்மார்களின் பாசுரங்கள், கன்னடத்திலுள்ள தாஸ கவிஞர் களின் துதிப் பாடல்கள், மராத்தியில் துறவிக் கவிஞர்களால் இயற்றப்பட்ட அபங்கங்கள், வைணவ இசைவாணர்கள் வங்காளி யில் பாடிய பதாவளிகள், இந்தியிலுள்ள ஞானக் கவிஞர்கள் இயற்றிய எண்ணிலடங்கா பக்திப் பாடல்கள், அவைகளின் இலக்கியச் சிறப்பிற்காக மதித்துப் பாதுகாக்கப்பட்டன.

கடந்த காலத்தில், இரு முக்கிய தெலுங்குப் பாடலாசிரியர்களான க்ஷேத்ரய்யா, தியாகராஜர் ஆகியோரின் படைப்புகள், மக்களின் ஆதரவைப் பெற்றன. ஆனால், அவைகளின் இலக்கியத் தரத்திற்காக, அவை போற்றப்பட வில்லை. வேறு சில காரணங்களினால், அவை போற்றப்பட்டன. க்ஷேத்ரய்யாவின் 'முவ்வ-கோபால-பதமுலு' புகழ்பெற்றதற்குக் காரணம், அப்பாடல்கள், நாட்டியத்தில், சைகைகள் மூலம் விளக்கக்கூடிய வகையில் அமைந்திருக்கின்றன. தியாகராஜரு டைய பாட்டுகள் அங்கீகாரம் பெற்றது அவைகளுடைய இலக்கியச் சிறப்பை முக்கியமானதாகக் கருதி அல்ல. அவைகளின் இலக்கியத் தரம் மிக உயர்ந்ததுதான். கச்சேரிகளில் பங்கு கொள்ளும் கர்நாடக இசைக் கலைஞர்கள், முதலாவதாகத் தேர்ந்தெடுக்கும் அப்பாடல்களின் இசைநயம்தான், அவை களுடைய மேன்மைக்குக் காரணம். தியாகராஜர் ஒரு துறவிக் கவிஞர். அவர், இராமனை தன்னுடைய ஒரே தலைவனாகக் கருதினார். வாழ்க்கை முழுவதையும், இராமனை வழிபடுவதி லேயே செலவிட்டார். அவர், தன்னுடைய உணர்ச்சிகளை, மிக நேர்த்தியான பல பாடல்களில் வெளிப் படுத்தினார். இப்பொழுது இராமனைப் புகழ்வார், இப்பொழுது ஏளனம் செய்வார், சில சமயம், தன்னைப் புறக்கணித்ததற்காக, இராமனைக் குற்றம் சாட்டுவார். தெய்வத்தின் தலையீடு சில சமயம் தேவைப்படும்பொழுது, மனவேதனை கலந்த கூக்குரல் எழுப்புவார். இராமனுடன் உறவு கொண்டாடும் பொழுது, உணர்ச்சிகளின் பல்வேறு நிலை களையும் காட்டி, அவைகளின் பரிமாணத்தைக் கணக்கிட்டார். அவர், தென்னக கர்நாடக இசைக்குச் செய்த தொண்டு மதிப்பிடமுடியாதது. ஆனால், கவிதைத் துறையில், அவர் புரிந்த சாதனைகளுக்காக, இனிமேல்தான் அங்கீகாரம் பெறவேண்டும். அன்னமாச்சார்யா காலத்தில், வடமொழி பாரம்பரியத்தையொட்டி எழுதி, தங்களுக்கென்று, தெலுங்கு இலக்கியத்தில் ஓர் இடத்தைப் பெற்றவர்களுள், பம்மேர போதனா ஒருவர். தன் எண்ணங்களிலும்,

தத்துவங்களிலும், போதனா, அன்னமாச்சார்யாவை ஒத்திருந்தார். மதத்தில் அக்கறை, திருமாலிடம் பக்தியைப் பரப்ப வேண்டு மென்ற கட்டுக்கடங்கா ஆர்வம், பாடலின் இனிமைக்காக, வழக்கமாகப் பின்பற்றவேண்டிய இலக்கண விதிகளைப் புறக்கணித்தல், இவைகள், போதனாவுக்கும், அன்னமாச் சார்யாவுக்குமிடையே காணப்படும் ஒற்றுமைகள். போதனா, பாகவத புராணத்தை, இலக்கணக் கட்டுக்கோப்பு அதிகமில்லாத் தெலுங்கில், மொழி பெயர்த்தார். அவருடைய 'மஹா பாகவதமு' தெலுங்கு மக்களிடையே, எப்பொழுதுமே, புகழ் பெற்றிருக்கிறது. இதற்குக் காரணம், அவருடைய ஆழ்ந்த பக்தி, கதையைச் சொல்லும் முறையின் சிறப்பு, பொருத்தமான சொற்றொடர்கள், பாக்களின் தொடர்ச்சியான இனிமை. ஆனால், அவரும் இலக்கண விதிகளைப் பின்பற்றாததற்காக, காலங்காலமாக, அறிஞர்களால் முக்கியமாக, இலக்கண ஆசிரியர்களால் புறக்கணிக்கப்பட்டார். ஒருவித புதுமையையும் கையாளாத, பண்டைய இலக்கணக் கட்டுப்பாடுகளுக்கு உட்படாத, அன்னமாச்சார்யா போன்ற புகழ் பெற்ற கவிஞர்கள், அறிஞர்களால் வெறுப்புடன் நடத்தப்பட்டு, முழுவதும், புறக்கணிக்கப்பட்டார்கள் என்பதில் வியப்பொன்று மில்லை.

அன்னமாச்சார்யா, ஆராய்ச்சியாளர்களின் கவனத்தை ஈர்ப்பதற்கு, முன்னூறு ஆண்டுகள் காக்க வேண்டியிருந்தது. அந்த நீண்ட காலத்தில், செப்பேட்டில் செதுக்கிய அவரது பாடல்களின் நகல்கள், திருப்பதிக் கோயிலின் சுற்றுச் சுவர்களுக்குட்பட்ட பகுதியில் இருப்பதைக் காலம், சந்தர்ப்பத்துடன் சேர்ந்து சதி செய்து, மறைத்தது. சில செப்பேடுகள், அஹோபலத்தில் மறைந்து கிடந்தன. சில, ஸ்ரீரங்கத்தில் மறைந்து கிடந்தன என்று தெரிய வருகிறது. அக்காலத்தில், அவருடைய பாடல்களின் ஓலைச்சுவடி களின் நகல்கள் கூட, தஞ்சாவூர் பகுதியில் இருந்தன. அவருடைய பாடல்களின் நகல்கள், அவ்வளவு பரந்த பகுதியில் இருந்தும் கூட, கடந்த மூன்று நூற்றாண்டு இலக்கிய வரலாறுகளில், அவை களைப் பற்றிய குறிப்பு காணப்படவில்லை. அப்பாட்டுப் பொக்கிஷத்தைக் கண்டுபிடித்து, அதன் தகுதியை மதிப்பிடுவது இந்நூற்றாண்டு அறிஞர்களின் பணியாக ஆகிவிட்டது.

அன்னமாச்சார்யா, தன் இளம் பிராயத்தில், தன் தந்தையிடமிருந்தும், பிற ஆசிரியர்களிடமிருந்தும், வடமொழி இலக்கியத்திலும், காவியங்களிலும், நல்ல பயிற்சி பெற்றார்

என்பதற்கு, அன்னமாச்சார்யாவின், எஞ்சியிருக்கும் எழுத்துக்களில் சாட்சியம் இருக்கிறது. ஜெயதேவருடைய கீத கோவிந்தம் பற்றி, அவர் நன்கு அறிந்திருந்தார். வடமொழியில், சில பாடல்களை அவர் இயற்றியிருந்தார். 'ஸங்கீர்த்தன லக்ஷணம்' என்ற, பக்திப் பாடல்களின் அமைப்பு பற்றியும், வடமொழி நூல் ஒன்று எழுதியிருக்கிறார். தெலுங்கில், நூறு பாடல்கள் கொண்ட, பன்னிரண்டு சதகங்களை இயற்றினார். வடமொழி சீரைப் பின்பற்றி, அப்பாடல்களை இயற்றினார் என்பது தெளிவாகிறது. அவைகளில் ஒன்றுதான், காலத்திற்கு இரையாகாமல், நமக்குக் கிடைத்திருக்கிறது. அவர், வால்மீகி இராமாயணத்தைத் தெலுங்கில் ஈரடிச் செய்யுளாகச் செய்திருப்பதாகத் தெரிய வருகிறது. இந்நூல், நமக்குக் கிடைக்கவில்லையாயினும், "சிருங்கார மஞ்ஜரி" என்ற ஈரடிச் செய்யுள்களாக இயற்றப் பட்டிருக்கும், மற்றொரு வரலாற்றுக் கவிதை நூல் கண்டெடுக்கப் பட்டு, வெளிக் கொணரப்பட்டிருக்கிறது. இவ்வுண்மைகளைப் பார்க்கும் பொழுது, அன்னமாச்சார்யா விரும்பியிருந்தால், பண்டைய கால மரபில், நீண்ட வரலாற்றுக் கவிதைகளை எளிதாக இயற்றி, தம் காலத்தில் வாழ்ந்த, இலக்கியப் படைப்பாளி களிடையே மதிப்புப் பெற்றிருக்க முடியும். உள்நாட்டுப் பாரம் பரியத்தைப் பின்பற்றி, எல்லோரும் புரிந்து கொள்ளும் பாடல்களை எழுத வேண்டும் என்ற அவருடைய முடிவு, ஸ்ரீ வெங்கடேஸ்வரரிடம், அவருக்கிருந்த தீவிர ஈடுபாட்டையும், அவருக்கு, அவரைச் சுற்றியிருந்த மக்களிடமுள்ள கருணை யையும், காட்டுகிறது. அவர் நம்பிக்கையூட்டும் செய்திகளை மக்களுக்கு வழங்கினார். உலக வாழ்க்கையில் சிக்கிக் கொண்டு, துன்புறுவோருக்கு, அச்செய்தியை வழங்குவதில், அவருக்கு ஒரு வேகம் இருந்தது. இச்செய்தியை மக்களுக்குச் சமர்ப்பிக்க, பாடல் என்ற கருவியை, விவேகமாகத் தெரிந்தெடுத்தார். ஒரு விதத்தில் அவர் தெலுங்கு இசைக் காவியத்திற்கு முன்னோடியாகத் திகழ்ந்தார். க்ஷேத்ரய்யாவுக்கும், தியாகராஜருக்கும் வழிகாட்டியா யிருந்தார். அவர்கள், அன்னமாச்சார்யாவின் வழிகாட்டுதலால், பயனடைந்தனர், நேர்த்தியான இசைக் காவியங்கள் இயற்றினர். இருந்தாலும், அன்னமாச்சார்யாவின் பாடல்களுடன் ஒப்பிடும் பொழுது, அவர்கள் பாடல்களின் எண்ண உணர்ச்சி வீச்சு குறைவாயிருக்கிறது என்றே சொல்ல வேண்டும். அன்னமாச் சார்யாவின் பக்தி, பல பண்புகளின் கலவை. அவையாவன:

அறிவு, வைராக்கியம், ஆழ்ந்த நட்பு உணர்வு, தாயன்பு, பணியாளனின் தொண்டு மனப்பான்மை, காதல், ஆன்மீக உணர்ச்சிகளின் சேர்க்கை. பக்தனுக்கும், கடவுளுக்குமிடையே இவ்வளவு விதமான உறவுமுறைகளைக் காண்பதரிது.

திருமாலிடம் பக்தியையும், அவரைத் தஞ்சம் புகுவதிலுள்ள சிறப்பு பற்றிய செய்தியைப் பரப்புவதற்கும், அவர் வழக்கத்திலிருந்த எல்லாவித நாடோடிப் பாடல் முறைகளையும் கையாண்டார். அவர் எழுதிய ஏராளமான பாடல்களும், அதில் அவர் கையாண்ட பொருள்களும், பதினைந்தாம் நூற்றாண்டில், வழக்கத்திலிருந்த நாடோடிப் பாடல்கள் பற்றிய நமக்குள்ள அறிவை, வளர்ச்சியடையச் செய்கின்றன. தெலுங்கு மக்களின் உள்நாட்டு இசைப் பாரம்பரியம் பற்றிப் பாராட்டும் வகையில் அமைந்த பல குறிப்புகள், பிருகத்தேசி, சங்கீத சூடாமணி, அபிலாஷிதார்த்த-சிந்தாமணி போன்ற பண்டைய நூல்களில் காணப்படுகின்றன. சில பாடல்களின் அமைப்புகூட, அவைகளில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. நன்னே சோடா, பாலகுருகி சோமநாதா போன்ற பன்னிரண்டு, பதின்மூன்றாம் நூற்றாண்டுச் சைவக் கவிஞர்களுடைய நூல்கள், இப்பாடல்கள் பற்றி, மேலும் சில விளக்கங்கள் தருகின்றன. அன்னமாச்சார்யா பாடல்களின் பதிப்பு, பாடல்கள் இயற்றுவதற்கான கோட்பாடுகள், அவைகளைக் கவிஞர்கள் எவ்வாறு கையாள்கின்றனர் என்பது பற்றி, அறிஞர்கள் தெரிந்து கொள்ளவும், அவருடைய பாடல்களைப் பொருளுக்குத் தக்கவாறும், அமைப்புக்குத் தக்கவாறும், பல பிரிவுகளாக வகைப்படுத்தவும் உதவுகிறது. நாடோடிப் பாடல் முறையில் அமைந்த அவரது பாடல்களில், தாலாட்டுப் பாடல்களும், திருமணப் பாடல்களும், திருமணங்களில் பாடப்படும் வாழ்த்துப் பாடல்களும் , நெல் குத்தும்போது பாடப்படும் பாடல்களும், இருவர் சேர்ந்து பாடும் பாடல்களும், குழந்தைகளைத் தாலாட்டும் போது பாடல்களும் அடங்கும்.

இலக்கியத்திற்கு, அன்னமாச்சார்யாவின் தொண்டு எவ்வாறு அளவிடற்கரியதோ, அவ்வாறே, தெலுங்கு மொழியில் அவர் இயற்றியவை அளவிடற்கரியது. அவர் உபயோகித்த சொற்கள் மிக அதிகம். சில சொற்கள் இப்பொழுது வழக்கத்திலில்லை. அகராதி தொகுப்போர், அவருடைய நூல்களில் மட்டும் காணப்படும் பல சொற்களின் பொருள்களைத் தெரிந்து கொள்ள இன்னும் முயன்று

கொண்டிருக்கின்றனர். அவர் உபயோகித்த சொற்களும், சொற்றொடர்களும், அவருடைய காலத்திய மற்ற நூல்களில் காணப்பட்டாலும், அன்னமாச்சார்யா, அவைகளை உபயோகித்த விதம்தான், அவைகளுடைய சரியான பொருளைத் தெரிந்து கொள்ள உதவுகிறது. அவருடைய பாட்டுகளில் பொருத்தமான பல சொற்றொடர்கள் காணப்படுகின்றன. அவைகள் அன்றாடப் பேச்சு வழக்கில் வந்துவிட்டன. சொற்றொடர்கள் தவிர, தெலுங்கு மொழிக்கே உரியதான கூற்றுகள், விவேகமான பொன்மொழிகள், பழமொழிகள், கண்ணைக் கவரும் கற்பனைகள், திகைப்பூட்டும் உவமைகள், எல்லாம் கலந்து, அவருடைய நடைக்கு ஒரு புதிய சுவையைக் கொடுக்கிறது. நவீன தெலுங்கு இலக்கிய ஆய்வில், அன்னமாச்சார்யாவின் பெயர் நிச்சயமாக, ஒரு முக்கிய இடத்தை வசிக்கும்.

அவருடைய உவமைகள், அன்றாட வாழ்க்கையிலிருந்து எடுக்கப்பட்டவையாயிருப்பதால், அவை தனிப்பொலிவுடன் விளங்குகின்றன. அவை காவியங்களிலிருந்து எடுக்கப்பட்ட வையல்ல. கடந்த காலத்தில், ஆந்திர கிராமப் பகுதிகளில், சாதாரணமாகக் காணப்படும் காட்சிகளைத் தாங்கி வருகின்றன அவை. மழையால் நனைந்த நெல் வயல்களின் வாசனையையும், புதிதாக வெட்டப்பட்ட புற்களின் வாசனையையும், காட்டுப் பூக்களின் வாசனையையும், வேள்வித் தீயில் எரியும் மரக்கட்டை களின் வாசனையையும், அவருடைய உவமைகள், வெளிக் கொணருகின்றன. கீழ்க்கண்ட பாடல், அவரைச் சுற்றியுள்ள உலகத்திலிருந்து, அவர் பொருத்தமான உவமைகளைத் தெரிந்தெடுக்கிறார் என்பதைக் காட்டும்.

*என் அறிவு எங்கே?*
*என் விவேகம் எங்கே?*
*ஒரு சாம்பல் குவியலில்*
*ஊற்றப்பட்ட நிவேதனம் போல்,*
*என் காலம் வீரயமாகிறது.*

*அவாவினால் தூண்டப்பட்டு,*
*லாபங்கள் அடையும் வீண் நம்பிக்கையுடன்,*
*இப்பாதையையும், அப்பாதையையும்,*
*தொடர்கிறேன்;*

*புதரில் மறைந்த மான்போல்,*
*என் காலம் விரயமாகிறது.*

*என் துன்ப அனுபவங்கள் முடியும்*
*என்ற மூடநம்பிக்கையில்,*
*முடிவில்லாத் துயரங்களின் தாபத்தைத் தாங்கினேன்;*
*அடுப்புத் தீயின் பக்கத்திலிருக்கும் வெண்ணெய் போல்*
*என் நேரம் கரைந்து விட்டது.*

*இன்பத்தைப் பின் தொடர்ந்து,*
*இடம் விட்டு இடம் வீணில் அலைந்தேன்,*
*என் தலைவன் வெங்கடாத்ரியைக் காணாது;*
*கட்டுக்கதையாக ஆகிவிட்டதே*
*என்காலம்!*

கவிஞன், தன்னுடைய நேரம் விவேகமாகக் கழிக்கப்படவில்லை என்னும் துயரத்தை, பாடலில் நான்கு உவமைகள் மூலம் கூறுகிறார்.

(1) வேள்வி செய்யும்பொழுது, நாடிய குறிக்கோளையடைய, வேள்வித் தீயில், நெய் நிவேதனமாக ஊற்றப்படுகிறது. தீயில் ஊற்றுவதற்குப் பதில், சாம்பல் குவியலில் ஊற்றுவது நேரத்தை வீணாக்கும். இவ்வுண்மை, கவிஞனுடைய நேரம், வீண் செயல்களில் செலவிடப்பட்டது என்பதை, வலியுறுத்துகிறது.

(2) வேடுவன், தான் பின் தொடரும் மானைத் தவற விட்டால், வீட்டிற்கு வீணே திரும்ப வேண்டியது தான். தன்னை ஏமாற்றிய மான், புதரில் ஒளிந்து கொண்டால், பயனில்லா முயற்சியினால், வேடுவனின் நேரம் வீணாகிறது.

(3) வெண்ணெய், தீயருகில் வைக்கப்பட்டால், உருகுகிறது. தன் சொந்த உருவத்தை இழக்கிறது. இம்மாறுதல், தானாகவே நிகழ்கிறது. கவிஞனுடைய நேரமும் உருகிவிட்டது. ஆனால், கவிஞன், தன் நேரத்தை வீணாக்க விரும்பவில்லை.

(4) கட்டுக்கதை, கட்டுக்கதைதான். ஒருவரும் கட்டுக் கதையை நம்புவதில்லை. நிழல்களே உள்ள இவ்வுலகில், ஸ்ரீ வெங்கடேஸ்வரர்தான் ஒரே உண்மை. அவரைக் காணச் செலவிடும் நேரமே, விவேகமாகச் செலவழிக்கப்பட்ட நேரம். ஸ்ரீ வெங்கடேஸ்வரரைத் தவிர, மற்ற இடங்களில் இன்பம் தேடுவது, கற்பனையை, உண்மையென்று நம்புவது போல், தவறானதே.

அன்னமாச்சார்யா, இலக்கியக் கலைஞராக, சீரிய இடத்தை வகிக்கிறார் என்பதை உறுதிப்படுத்த, போதுமான ஆதாரங்கள் கொடுக்கப்பட்டுவிட்டன. அவருடைய குறைபாடுகளைப்பூசி மெழுகத் தேவையில்லை. குற்றமற்ற தன்மை கடவுளுடைய இயல்பு. மனித முயற்சிகளெல்லாம், ஓரளவு குற்றமுள்ளவையாகத் தானிருக்கும். அன்னமாச்சார்யா நூல்களும், இக்குற்றங்களுக்கு விதிவிலக்கல்ல.

எண்ணிக்கையும், தரமும், எப்பொழுதுமே ஒத்துப் போகாது. ஒருவனுடைய இலக்கியப் படைப்பு அபரிதமாயிருக்கும்பொழுது, அது ஒரே தரமாக இருக்க முடியாது. மீண்டும் மீண்டும் ஒன்றைச் சொல்லுதல், அன்னமாச்சார்யா போன்ற எழுத்தாளர்களிடையே ஒரு தவிர்க்க முடியாத குறை. அவருடைய இலக்கியப்பணி நீண்டகாலம் தொடர்ந்தது. அக்காலத்தில், ஆயிரக்கணக்கான பாடல்கள் உருவாயின. இரண்டு, மூன்று பாடல்கள் ஒரே உணர்ச்சியைப் பிரதிபலிக்கும் பொழுது, ஒரே விதமான வாதங்களையும், விளக்கங்களையும் உபயோகிக்கும் பொழுது, அதில் ஒன்று, இயற்கையாகவே, ஒளிபொருந்திய இரத்தினம் போல் சொலிக்கிறது. மற்றவை, அதன்முன், பட்டை தீட்டப்படாத வைரங்கள் போல், ஒளியிழந்து காணப்படுகின்றன.

அவருடைய பாக்கள், செவி இன்பத்திற்காக எழுதப் பட்டவை, கண்பார்த்துப் படித்து, அனுபவிப்பதற்காக அல்ல. இசையினால் ஏற்படும் சில விளைவுகளைப் பெறுவதற்காக, பாட்டமைப்பில் சில இடங்களில், பல சொற்களிடையே ஒலி ஒற்றுமை, மோனை, எதுகை, சீர்ப்பிரமாணம் முதலிய உத்திகளை அவர் கையாள வேண்டியிருந்தது. சில சொற்களை, அவைகளின் பொருளுக்கல்லாது, ஒலிக்காகத் தெரிந்தெடுத்தார். தேவையில்லா அச்சொற்கள், பாடலின் பயனைக் குறைக்கிறது. ஆனால்,

இக்குறைபாடு, அவருடைய எல்லாப் பாடல்களிலும் காணப் படுவது அல்ல. ஆனந்தக் காட்சியை காணும் பொழுதோ, ஆழ்ந்த உணர்ச்சியினால் தூண்டப்பட்ட பொழுதோ, குற்றமற்ற, வேலைப்பாடு நிறைந்த, மிக நேர்த்தியான பாடல்களை, அவர் புனைகிறார். நல்ல கலை நுணுக்கத்துடன் செய்யப்பட்ட நகையில், எப்படி ஒவ்வொரு இரத்தினக் கல்லும் சரியாகப் பதிக்கப்பட்டு ஒளியைக் கொட்டுகிறதோ, அவ்வாறே, ஒவ்வொரு சொல்லும், அதனுடைய இடத்தில் மிகப் பொருத்தமாகப் பொருந்தி, ஒளியைக் கொட்டுகிறது.

கட்டுக்கடங்கா உணர்ச்சியுடன் எழுதுவது அவர் கால இலக்கியத்தின் சிறப்பியல்பாக இருந்தது. கட்டுப்பாட்டுடன் எழுதுவது அக்கால வழக்கமல்ல. அன்னமாச்சார்யாவின் நூல் களிலும், உணர்ச்சிப் பெருக்கைக் காட்டும் எண்ணங்களும், கூற்றுகளும் இல்லாமலில்லை. அவ்வுணர்ச்சி வெள்ளம், சுய சோதனையினால் கட்டுப்படுத்தப்பட்டிருந்தால், அன்னமாச் சார்யாவின் எண்ணங்களும், கூற்றுகளும், இன்னும் ஆழமுடை யனவாய் இருக்கும், இன்னும் நேர்த்தியாய் மிளிரும்.

மேற்கூறியவைகளெல்லாம், அவர் பாடல்களிலுள்ள சிறிய குறைகள். அவை, அன்னமாச்சார்யா சிறந்த துதிப்பாடலா சிரியராகப் புரிந்திருக்கும் உயரிய சாதனையை குறைக்கவில்லை. காளிதாசனுடைய[34] உவமையை மேற்கோள் காட்டினால், அக்குறைகள் நிலவிலுள்ள கறுப்புப் புள்ளி போன்றதே. விண்ணிலுள்ள பிரகாசமான நிலவின் ஒளியை, அக்கறுப்புப் புள்ளி எவ்விதத்திலும் குறைக்கவில்லை.

அன்னமாச்சார்யா, இலக்கியத்திற்கும், நம் பண்பாட்டு வளர்ச்சிக்கும் விட்டுச் சென்றிருக்கும் பொக்கிஷத்தைப் பற்றிய எந்த மதிப்பீடும், கர்நாடக இசை (செவிக்கு இன்பமூட்டும் இசை) என்றழைக்கப்படும், தென்னக பண்டைய இசையை உருவாக் கியதில், அவன் முன்னோடியாயிருந்ததை, பேச்சு வாக்கிலாவது சொல்லியாக வேண்டும். ராகம்தான் எல்லா இந்திய இசைக்கும் அடிப்படையென்றிருந்தாலும், கர்நாடக இசையில், பாடல், ஆலாபனையைவிட முக்கியத்துவம் பெற்றிருக்கிறது. ராகமும், பாடலும் பிரிக்க முடியாதவை. தென்னக இசைத் துறையில், எதற்கு முக்கியத்துவம் கொடுப்பதென்பதில் ஒரு சிறிய மாற்றம்தானிருக்கிறது. பாடகர்கள், ஆலாபனையைக் குறைத்துப்

பாடலை விரிவாகப் பாடுகின்றனர். இசை நூல்கள், இசை வளர்ச்சியைப் பற்றி அறிந்து கொள்வதில் முக்கியத்துவம் வாய்ந்தவை. துறவிக் கவிஞர்களின் பாடல்கள், இசை வளர்ச்சியைத் துரிதப்படுத்துவதில், முக்கிய பங்கு வகிக்கின்றன. காலக் கணக்கில், துறவிக் கவிஞர்களில் முதல்வர், அன்னமாச் சார்யாதான். அவருடைய பக்திப்பாடல்களும், அவைகளுடைய அமைப்பு பற்றி, அவர் எழுதிய "ஸங்கீர்த்தன லக்ஷணம்" என்ற நூலும், கர்நாடக இசை தோன்றுவதற்கு அடிகோலியது என்று, இசை விற்பன்னர்கள் தயக்கமில்லாமல் ஒப்புக் கொள்கின்றனர்.[35] அன்னமாச்சார்யாவின் காலத்தில் வாழ்ந்த, அவருக்கு இளையவரான, புரந்தரதாஸர், கர்நாடக இசையைச் செம்மைப் படுத்தினார். அவருடைய படைப்பின் அளவைக் கொண்டு, அவர் கர்நாடக இசையின் முன்னோடி என்று கருதப்படுகிறார். இசைத் துறையில் மிகச் சிறந்தவர் தியாகராஜர். தன்னுடைய பாடல்களின் அமைப்பை உருவாக்குவதிலும், இசைத் துறையின் கட்டுமான அமைப்பை மேலும் செம்மைப் படுத்துவதிலும், அவருடைய சிறப்பெய்திய முன்னோர்களான அன்னமாச்சார்யா, புரந்தரதாஸர் ஆகியோருக்குக் கடமைப் பட்டிருக்கிறார். அவர், தன் முன்னோர்களிடமிருந்து, கடவுளை அடைவதற்கு நிச்சயமான வழி, இசைதான் என்ற பேருண்மையை அறிந்தார். தன்னுடைய புகழ்பெற்ற பாடல்கள் ஒன்றில் அவர் கேட்கிறார்: "ஏ மனமே! கடவுளை அடைவதற்கு, இசை, பக்தியைத் தவிர வேறு சிறந்த வழி உண்டோ?"

இதுவரை, கலைத்துறையில், அன்னமாச்சார்யா புரிந்திருக் கும் சாதனைகளைப் பல கோணங்களிலிருந்து ஆராய்வதற்கு, ஒரு முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. அவர் மக்களுக்குச் செய்த மிகப் பெரிய தொண்டு பற்றி குறிப்பிட வேண்டும். மக்கள் கடவுளைப் பல பெயர்களில் அழைத்தாலும், அவர் ஒன்றுதான் என்ற மிகப் பெரிய உண்மையின் அடிப் படையில், மனித குலத்தின் சகோதரத்துவத்தைப் பற்றி, அன்னமாச்சார்யா, இடைவிடாது பிரசாரம் செய்தார்.

அன்னமாச்சார்யா, கடவுளை, திருமாலின் காட்சிகளுள் மிக நேர்த்தியான ஸ்ரீ வெங்கடேஸ்வரராகக் கண்டார் என்பது உண்மை. தஞ்சம் புகுதல் என்ற வைணவக் கொள்கையை அவர் அயராது பரப்பினார். ஆனால், அவர், வைணவத்தில் நம்பிக்கையுள்ள

சமூகத்தின் ஒரு குறுகிய பிரிவு மக்களின் நலனில் அக்கறை கொண்ட கடவுளாகத் திருமாலைக் கருதியதில்லை. அவருடைய திருமால், ஈடுஇணையில்லாத் தெய்வீக சக்தி, உயிரினங்களின் விண்ணுலகத் தந்தை.

விஷ்ணு என்ற சொல்லே 'எங்கும் நிறைந்திருப்பவன்' என்று பொருள்படும். அது 'விஸ்' என்ற மூலச் சொல்லிலிருந்து வந்தது. அதற்கு, "பரவுதல்", "உட்புகுதல்" என்று பொருள். 'விஷ்ணு' எங்கும் நிறைந்திருப்பவன், இடம், நேரம், பொருள், இவைகளால் கட்டுப்படுத்தப்படாதவன். விஷ்ணுபுராணத்திற்கொப்ப, அவன், 'விஷ்ணு' என்றழைக்கப்படுகிறான்.[36] ஏனென்றால், உலகம் முழுவதும், கடவுளின் பெரும் ஆன்மசக்தி நிறைந்திருக்கிறது. மஹாபாரதத்தில், கண்ணன், அர்ஜுனனிடம் கூறுகிறார். "அடி வானங்களில் நான் பரவியிருக்கும்பொழுது, என் சிறப்பு முதன்மை யாயிருக்கிறது; மூவுலகங்களையும், என் பாதங்களால் அளந்த பொழுது, நான் 'விஷ்ணு' என்று அழைக்கப்பட்டேன்." எப் பொழுதுமே, விஷ்ணு, உருவமுள்ள தலையாய கடவுளாக, முடி வில்லாப் பரப்பிரும்மமாகக் கருதப்படுகிறார். அன்னமாச்சார்யா, விஷ்ணுவை, தெய்வீகத் தந்தையாக, நிலையான நண்பனாக, எல்லா உயிரினங்களுக்கும் தஞ்சம் புகும் ஒரே இடமாகக் காண்கிறார்.

அவருடைய பாடல்கள் ஒன்றில், திருமால், பல மதப்பிரிவுகளின் ஆண், பெண் கடவுள்களின் மொத்த உருவம் என்று கூறி, அவர் எங்கும் பரவியிருப்பதை வலியுறுத்துகிறார்.

*ஒருவனுடைய கற்பனைக்குத் தக்கவாறு*
*நீங்கள் மாறுகிறீர்கள்;*
*சுடப்பட்ட பணியாரத்தின் அளவு*
*கிடைக்கும் மாவைப் பொருத்ததுதான்*
*என்பது தெளிவு.*

*வைணவர்கள்*
*உங்களை*
*'விஷ்ணு' என்று தொழுகின்றனர்;*
*வேதாந்தத்தை ஒத்துக் கொள்வோர்,*
*உங்களைப் பரப்பிரம்மம் என்று போற்றுகின்றனர்;*

*பக்தி நிறைந்த சைவர்கள்*
*உங்களைச் சிவனாகக் கருதுகின்றனர்;*

*காபாலிகர்கள்*
*உங்களை*
*ஆதி பைரவர் எனக் கருதி*
*உங்கள் புகழுரைகளைப் பாடுகின்றனர்.*

*பெண்கடவுள்களை வழிபடுவோர்,*
*உங்களைச் 'சக்தி' என்று வணங்குகின்றனர்;*
*உபநிடதங்களும், புராணங்களும்,*
*உங்களைப் பலவிதமாகக் கற்பனை செய்து கொள்கின்றன;*
*உங்களைச் சிறிதும் மதியாதவனுக்கு,*
*நீங்கள் சிறியவனாகத் தெரிகிறீர்கள்;*
*உங்களைச் சிறப்பாக நினைப்பவனுக்கு,*
*நீங்கள் உயர்வாகத் தெரிகிறீர்கள்.*

*குறை உங்களிடமில்லை;*
*குட்டையிலுள்ள தாமரைபோல்*
*நீரின் மட்டத்திற்கேற்ப*
*உயர்கிறீர்கள்,*
*குறைகிறீர்கள்;*
*கங்கையாறு பக்கமுள்ள*
*எல்லாக் கிணறுகளில் மாத்திரம்*
*ஆற்றுத் தண்ணீர் காணப்படுகிறது.*

*வெங்கடாத்ரிக் குன்றின் தலைவனே!*
*நீங்கள், உங்கள் ஆட்சியின் கீழ்,*
*எங்களை வைத்திருக்கிறீர்கள்;*
*நான் உங்களைத் தஞ்சம் புகுகிறேன்;*
*இதுவே*
*எனக்குத் தெரிந்த*
*முடிவான உண்மை.*

சொற்ப அறிவுள்ள, ஆனால் மிக்க இனவெறி கொண்ட மனிதர்களால், அற்ப காரணங்களுக்காக, முற்றிலும் நிரூபிக்க முடியாத வாதங்கள் வாதாடப்படுகின்றன. அவர்கள், ஸ்ரீ வெங்கடேஸ்வரர், சிவனோ, சக்தியோ, முருகக் கடவுளோ என்று கூறுகின்றனர். ஆனால், புகழ்பெற்ற காவியமான சிலப்பதிகாரத்தை எழுதிய இளங்கோ அடிகள், இரண்டாவது நூற்றாண்டிலேயே,

வேங்கடக் குன்றிலுள்ள கடவுள், ஸ்ரீ வெங்கடேஸ்வரரே, என்று உறுதியாகக் கூறியுள்ளார். இக்கூற்றை, காலம் காலமாக வந்த ஆழ்வார்கள் ஒவ்வொருவரும், ஆமோதித்துள்ளனர். மற்றக் கடவுள்களின் மீதுள்ள சில அடையாளங்கள், குறியீடுகள், ஸ்ரீ வெங்கடேஸ்வரர் சிலை மீதும் காணப்படுவது பற்றிய குறிப்புகள், ஆழ்வார்களின் பாசுரங்கள் சிலவற்றிலேயே காணப்படுகின்றன, ஆழ்வார்கள், வேங்கடக் குன்றுக் கடவுள், திருமால்தான் என்பதை ஒரு கணமேனும் சந்தேகிக்கவில்லை. அன்னமாச்சார்யாவின் மேற்கூறிய பாடலும், கடவுள்களின் ஒருமைப்பாட்டையும், முழுமுதற்கடவுளின் பல்வேறு அவதாரங்களின் பல நாமங்களும், உருவங்களும், ஒருவனையே குறிக்கிறது என்பதை உறுதிப்படுத்தும் நோக்கத்துடனேயே, இயற்றப்பட்டிருக்கிறது.

இந்த உண்மை, மஹாபாரதத்தில், ஆனுசாஸன பர்வத்திலுள்ள, திருமாலின் எண்ணிறந்த பண்புகளைப் பறைசாற்றும், சிறந்த துதிப்பாடலான, விஷ்ணு ஸஹஸ்ரநாம தோத்திரத்தில், பல நூற்றாண்டுகளுக்கு முன்பு, முனிவர் வியாஸரால், தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. அவர் மற்ற கடவுள்களைக் குறிப்பிடும், ஸர்வ, சிவ, ஸ்தாணு, சம்பு, ருத்ர, ஸ்காந்த, ஆதித்ய, பானு போன்ற பல நாமாக்களை தோத்திரத்தில் ஊடே சேர்த்திருக்கிறார். சங்கரர், இத்தோத்திரம் பற்றிய விளக்கவுரையில், கூறுகிறார்: ''இத்தோத்திரத்தில் வழிபாடு செய்யப்படும் பொருள், ஈடு இணையில்லாக் கடவுள்; உலகிலுள்ள எல்லாவற்றிற்கும் ஒளி கொடுக்கும் ஒளி; நம்முள்ளே என்றும் நிலைத்திருந்து அரசாட்சி செய்பவன்; உலகங்களின் படைப்புக்கும், காத்தலுக்கும், அழித்தலுக்கும் காரணமானவன்; நம்முடைய வினைத்தளையை அறுத்து, நம்மைக் காத்து, அறிவை ஊட்டி, மீட்பவன்.''[38]

அன்னமாச்சார்யாவின் உண்மையான வைணவனைப் பற்றிய கருத்து, அவனுடைய உலகம் முழுதும் பரந்துள்ள திருமாலைப் பற்றிய கருத்துக்கு ஒத்ததாக இருக்கிறது. அன்னமாச் சார்யா, ஆழ்வார்களுடைய, வைணவ ஆசான்களுடைய சிறந்த பாரம்பரியத்தின் வாரிசு. எவன் ஒருவன் உண்மையான பக்தனோ, அவனே வைணவன் என்று அவர் கூறும்பொழுது, சாதி, சமூகநிலை, இவைகளின் குறுகிய வரையறைகளை, அவர் கடந்து நிற்கிறார். அவருடைய சில பாடல்கள், சாதி, மதக்கட்டுப் பாடுகளைத் தவிர்ப்பது பற்றிப் பேசுகின்றன. அவைகளில்

ஒன்றில், சாதி வேறுபாடுகள் மனித உடலைப் பற்றியது, ஆன்மா எப்பொழுதும் தூய்மையானது என்று கூறுகிறார். சாதிவேறுபாடு களை ஏற்றுக் கொள்வது, அவை பற்றிப் பேசுவது, நேரத்தை வீணாக்குவதுதான். அந்தணனாகப் பிறந்து, தாழ்ந்த சாதிப் பெண்ணோடு வாழ்ந்து, கடைசியில் திருமாலால் மீட்கப்பட்ட, அஜாமிளா போன்றவர்களுடைய சாதியை, நிர்ணயிப்பது கடினம். எவனொருவன், திருமாலுக்குப் பணிவிடை செய்யும் சிறப்பை அறிகிறானோ, அவனே நல்ல சாதியைச் சார்ந்தவன் என்று சொல்லப்படலாம்.

மற்றொரு பாட்டில், அவர், பிறப்பின் காரணமாக ஒருவன் பக்திமானாக ஆகமுடியாது, நற்பண்புகளை வளர்த்துக் கொள்வதுதான், ஒருவனைப் பக்திமானாக்க முடியும் என்று கூறுகிறார்.[39]

*யாராயிருந்தாலும் சரி,*
*எச்சாதியைச் சார்ந்தவனாயிருந்தாலும் சரி,*
*எவனொருவன் திருமாலைக் காண்கிறானோ,*
*அவனே மனிதன்-*

*எவன் உண்மையைப் பின்பற்றுகிறானோ,*
*பிறரைப் பற்றிய ஏளனப் பேச்சுகளை வெறுக்கிறானோ,*
*எவனொருவன் எல்லா உயிர்களிடத்தும்*
*அன்பு காட்டுகிறானோ,*
*மற்றோரைத் தன்னைப் போல் நடத்துகிறானோ,*
*அவனே மனிதன்.*

*இதயத் தூய்மையுடனும்,*
*மிகுந்த கட்டுப்பாட்டுடனும்,*
*அவன், நேர்மையை,*
*உறுதியாகக் கடைப்பிடிக்கிறான்;*
*மதச்சடங்கு, சம்பிரதாயச் சிக்கலிலிருந்து விடுபட்டு,*
*அவன், திருமாலிடம் அன்பு செலுத்துவதிலேயே*
*கவனம் செலுத்துகிறான்.*

*காழ்ப்புணர்ச்சியால் தீண்டப்படாமல்,*
*நல்லெண்ணத்துடன்,*
*மற்றவரிடையே, அவன் வாழ்கிறான்,*

*ஆன்மாவின் உண்மை இயல்பை அவன் அறிவான்;*
*அவன், ஸ்ரீ வெங்கடேசனுக்கு, முழு மனதுடன்,*
*பணிவிடை புரிகிறான்.*

வைணவக் கொள்கை, எப்பொழுதுமே சாதியைப் பற்றி, பரந்த மனப்பான்மையை வளர்த்திருக்கிறது. அது, ஒரு சாதியில் பிறப்பது முக்கியமல்ல, கருணை படைத்த திருமாலின் பாதங்களில் செலுத்தப்படும் ஆழ்ந்த பக்திதான் முக்கியம் எனக்கூறுகிறது. ஆழ்வார்கள், பல சாதிகளைச் சார்ந்தவர்கள். அவர்களில் திருப்பாணாழ்வார் என்ற பெயருள்ள ஒருவர், தீண்டப்படாத, பஞ்சம சாதியைச் சார்ந்த பெற்றோர்களுக்குப் பிறந்தவர். மதிப்பிற்குரிய அம்முனிவரைப் பற்றிய ஒரு கதை, வைணவர்கள் பரம்பரையில், சாதியைவிட பக்திக்குத் தரப்படும் சிறந்த இடத்தை, எடுத்துக் காட்டுகிறது. அந்தணர்கள் அருகே, கீழ்ச்சாதியைச் சார்ந்த ஒருவன் சென்றால், அவர்கள் புனிதத் தன்மை கெட்டுவிடுமென்ற பரம்பரை நம்பிக்கை காரணமாக, திருப்பாணாழ்வார், ஸ்ரீரங்கத்திலுள்ள, காவிரி ஆற்றில் நீராடும் பொழுது, சற்றுத் தள்ளியே நீராடுவார். அப்படியிருந்தும், அவர், ஒரு சமயம், ஸ்ரீ அரங்கநாதனின் பணியாட்களுள் ஒருவரான, லோகசாரங்க முனி சென்று கொண்டிருக்கும் பொழுது, அவருடைய பாதையைக் கடக்க நேர்ந்தது. மிகச் சினங்கொண்ட லோகசாரங்கர், திருப்பாணாழ்வார் மீது கற்களைத் தூக்கி எறிந்தார். மறுபடி ஆற்றில் நீராடி, தன்னைப் புனிதப்படுத்திக் கொண்டு, நீர் நிரம்பிய ஒரு பாத்திரத்துடன், முறையான மதச்சடங்குகளோடு, திருமாலை வழிபடுவதற்குக் கோயிலுக்குச் சென்றார். ஆனால், மமதை பிடித்த அந்தணனை திருமால் கோயிலிலுள்ளே செல்ல அனுமதிக்கவில்லை. மதிக்கத்தக்க ஒரு முனிவரை, கற்களால் அடித்ததற்காக, லோக சாரங்க முனி, முதலில் தண்டனையேற்க வேண்டுமென்று, திருமால், வற்புறுத்தினார். ஆகையால், அந்தணராகிய, லோகசாரங்க முனி, தன் பாவத்திற்குப் பரிகாரமாக, தீண்டப்படாதத் திருப்பாணாழ்வாரை, அவருடைய ஆட்சேபங் களுக்கிடையே, தன் தோள்களில் தூக்கிக் கொண்டு, கோயிலைச் சுற்றி வரவேண்டியிருந்தது.

விசிஷ்டாத்வைத சமயப்பிரிவின் மிகச் சிறந்த ஆசானான, இராமானுஜர், தன்னைச் சுற்றியுள்ள மக்களின் துயர நிலைகண்டு,

இரக்கத்தினால் நெஞ்சம் நெகிழ்ந்தார். ஸ்ரீரங்கத்திற்கு அருகே யுள்ள, திருக்கோட்டியூர் திருமால் கோயிலின் உச்சி மீதேறி, அங்குக் குழுமியிருந்த மக்களுக்கு, அவர்களின் சாதி, சமூகநிலை பாராது, எட்டெழுத்துக் கொண்ட 'ஓம் நமோ நாராயண' எனும் மந்திரத்தை, திணறவைக்கும் உலக வாழ்க்கைத் தளையிலிருந்து, அவர்கள் விடுபடவேண்டுமென்ற, உயர்ந்த நோக்கத்துடன், உபதேசித்தார்.

அன்னமாச்சார்யாவின் பாடல்கள், இப்பரந்த நோக்கத்தைக் காட்டுகிறது. கடவுளின் கருணை எல்லோருக்கும் கிடைக்கிறது என்ற ஆழ்ந்த உண்மையை தொனிக்கும் குரலில், அவர் அறிவிக்கிறார்.

*கடவுள் ஒருவரே, அவர் ஒருவரே,*
*அவர் ஒருவரே, அவர் ஒருவரே.*
*உயர்ந்தோன், தாழ்ந்தோன் என்ற பிரிவினைகளுக்கே*
*இங்கு இடம் கிடையாது;*
*திருமால், எல்லா உயிரினங்களுக்குள்ளும் குடி கொள்வோன்.*

*தூக்கத்தின் சுகம்,*
*அரசனுக்கும்,*
*அவனருகே ஓய்வெடுக்கும்*
*காவலாளிக்கும்,*
*ஒரே மாதிரியானதுதான்;*
*அந்தணன் வசிக்கும் மேட்டுப் பகுதியானாலும்,*
*தீண்டாதோன் வசிக்கும்*
*தாழ்வான பகுதியானாலும்,*
*நிலம் ஒன்றுதான்.*

*விண்ணோர்க்கும்,*
*பூச்சிகளுக்கும்,*
*மிருகங்களுக்கும்,*
*எல்லா பிராணிகளுக்கும்,*
*சிற்றின்பம் ஒரே மாதிரியானதுதான்;*
*செல்வந்தனுக்கும் ஏழைக்கும்*
*பகலும், இரவும், ஒரே மாதிரியானதுதான்.*

*மிருதுவான, ருசியுள்ள ஆகாரத்தைப் புசிப்பவனுக்கும்,*
*பழைய, சுத்தமில்லாத பண்டத்தைப் புசிப்பவனுக்கும்,*
*பசி ஒரே மாதிரியானதுதான்;*
*தூய்மையற்ற, நாற்றமெடுக்கும் இடங்களில் வீசும் காற்றும்,*
*தூய, மணம் கமழும் பொருள்களின் மீது வீசும்*
*காற்றும், ஒன்றுதான்.*

*ஒரே சூரியன்தான்,*
*யானை மீதும், தாழ்ந்த சாதி நாய் மீதும்,*
*ஒளி வீசுகிறது;*
*ஸ்ரீ வெங்கடேசனின்*
*வல்லமை படைத்த நாமம்*
*பாவியையும், நேர்மையற்றவனையும் காக்க*
*வல்லமைபெற்றது.*

வீட்டுக்கு வீடு இருக்கும் சுவர்களான, குறுகிய மனப்பான்மையைக் குறிக்கும், மதவெறி, கொள்கை முரண்பாடு, இனவெறி, ஒருவருக்கொருவர் சந்தேகம், இவைகளால் மனிதனிடமிருந்து மனிதன் பிரிக்கப்பட்டிருக்கும்பொழுது, ஒற்றுமை, இணக்கம், ஒருவரையொருவர் புரிந்து கொள்ளுதல் பற்றி, பகிரங்கமாகக் கூறும் பாடல்களைக் காண்பதரிது. மொழி, இனம், மதம், சாதி, கொள்கை ஆகிய வெளிப்படையான வேற்றுமைகளால் பிரிக்கப் பட்டிருக்கும் மக்களின் விண்ணுலகத் தந்தை, ஈடு இணை யற்றவனாகில், அவனுடைய கருணை, அவனையண்டும் எல்லோருக்கும் உறுதியாகக் கிடைக்கும். ஒருவனுடைய ஆன்மீகக் கொள்கை எதுவாயிருந்தாலும் சரி, ஒருவனுடைய வழிபாடு முறை எதுவாயிருந்தாலும் சரி, திருமாலுடைய கருணை எல்லோருக்கும் உண்டு.

இம்மனோநிலை, புகழ்பெற்ற ஒரு செய்யுளிலுள்ள உணர்ச்சியுடன் ஒத்திருக்கிறது. அச்செய்யுள் இவ்வாறு கூறுகிறது. "ஆகாயத்திலிருந்து விழும் மழைத்தண்ணீர் வழக்கமாகக் கடலில் சென்று விழுவதுபோல், எல்லாக் கடவுள்களுக்குச் செலுத்தப்படும் வணக்கங்கள், திருமாலைச் சென்று அடைகின்றன". கண்ணன், அர்ஜுனனிடம், இதைத்தான் கூறுகிறார்; "மற்ற கடவுள்களை முழு நம்பிக்கையுடன் தொழுபவர்கள் கூட, என்னையே தொழுகிறார்கள்".[40]

அன்னமாச்சார்யா, உலகில் உள்ள ஒவ்வொருவனும், அவன் அறிந்தோ, அறியாமலோ, வைணவன், என்ற தனது நம்பிக்கையை, ஒரு பாடலில் பகிரங்கமாகக் கூறுகையில், ஆன்மீக உலகில் காணப்படும் பரந்த மனப்பான்மையைப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

*உலகம் முழுமையும்,*
*திருமாலின் சக்தியால் நிரப்பப்பட்டிருப்பதால்,*
*உலகில் வைணவனல்லாத எவனும் இல்லை.*
*திருமால் எங்கும் பரந்திருக்கும் பொழுது,*
*ஏன் கடவுள்களுக்குள்*
*வேற்றுமை உண்டாக்குகிறாய்?*
*எந்த உருவத்தை ஒருவன் கற்பனை செய்தாலும்,*
*அவன் புனிதப்படுத்தப்படுகிறான்.*

*எந்தக் கடவுளைத் தொழுகிறான்,*
*எந்தக் கடவுளைக் குறித்து தியானம் செய்கிறான்*
*என்பது பற்றி அக்கறையில்லை;*
*ஒருவன், திருமாலுடைய காட்சி அல்லாதது,*
*எதுவும் இல்லை, என்று புரிந்து கொண்டால்,*
*அதுவே போதும்.*

*சலனமுற்ற மனதினால் தூண்டப்பட்டு,*
*சிலர், மற்ற கடவுள்களின் உருவங்களை வணங்கலாம்;*
*அப்படியிருந்தும், கைவிடப்பட்டவர்களின் துணைவன்,*
*புனித வேங்கடக் குன்றின் சீரிய தலைவன்,*
*மக்களுக்கு, வேற்றுமை பாராது,*
*தன் கருணைக் கரங்களைத் தவறாது நீட்டுவான்.*

அன்னமாச்சார்யா, 'விஷ்ணு' என்ற சொல்லை, சமயப் பிரிவைக் காட்டும் குறுகிய பொருளில் உபயோகிக்கவில்லை. அச் சொல்லை, மிக உயர்ந்த உண்மையை, உலகங்களுக்கெல்லாம் தலைவனை, எல்லா உயிரினங்களுக்கும் தந்தையைக் குறிக்க உபயோகிக்கிறார். திருமாலுடைய குழந்தைகளான நாம், இயற்கையான உறவுப் பிணைப்புகளால் கட்டுண்டிருக்கிறோம். நாம் எல்லோரும், உலகமாகிய ஒரே குடும்பத்தைச் சார்ந்தவர்கள். இதில், வெறுப்பிற்கும், சந்தேகத்திற்கும் இடமில்லை, புரிந்து

கொள்ளும் மனப்பான்மைக்கும், அன்பிற்கும்தான் இடமிருக்கிறது. காலம் கடந்த, ஆனால், காலத்திற்கொத்த இச்செய்திதான், வணக்கத்திற்குரிய, இந்தக் கடவுளின் இசைவாணர் விட்டுச் சென்ற மிக மதிப்புள்ள சொத்து.

## குறிப்புகள்

(1) ஐ.22.20. இப்பாடலின் விளக்கத்திற்குப் பார்க்க : அ.க. மஜூம்தார், சைதன்யா, அவரது வாழ்க்கையும், கொள்கையும், வைணவத்தில் ஓர் ஆராய்ச்சி (பம்பாய்: பாரதீய வித்யா பவன், 1969) பக்கம் 2-4.

(2) ஐ.15.3

(3) டையானா எல்.எக், தர்சன், இந்தியாவில் தெய்வீக உருவத்தைப் பார்த்தல் (சேம்பர்ஸ்பர்க், பிஏ: அனிமா பதிப்பகம், 1985), பக்கம் 45.

(4) ஜான் பி.கார்மன், இராமானுஜரின் சமயம், மதங்களுக்குள் மன ஒற்றுமை (நியூ ஹேவன்: யேல் பல்கலைக்கழக அச்சகம், 1974), பக்கம் 244 - 48.

(5) பகவத் கீதையின் முடிவில், கண்ணன் தனது இறுதி உபதேசமாகக் கூறுகிறார்: 'நன்னடத்தை, ஆன்மீக வளர்ச்சி முதலியவற்றுக்கு முயற்சிகளை நம்புவதைக் கைவிட்டு விட்டு, என்னைத் தஞ்சம் புகு, விசனப்படாதே. உன்னை நான் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுவிக்கிறேன்'' (18:66). விசிஷ்டாத்வைதச் சமயப் பிரிவைப் பின்பற்றுவோர், இச்செய்யுளை, இறுதிச் செய்யுளாகக் குறிப்பிடுகின்றனர். இதை, அஷ்டாக்ஷரி, த்வயம் போன்ற மந்திரங்களுடன், ஒரு மந்திரமாகக் (இடைவிடா தியானத்துக்குரிய இரகசியப் பொருளடங்கிய சூத்திரம்) கருதுகின்றனர்.

(6) எவிலின் அண்டர்ஹில், தியானத்தினால் பரம்பொருளைக் காணுதல் (நியூயார்க், இ.பி.டட்டன், 1911) பக்கம் 425.

(7) பி.என். ஸ்ரீநிவாஸாச்சாரி, ''இந்திய கலாச்சார பாரம்பரியத்தில் இராமனுஜரின் விசிஷ்டாத்வைதம்'' (கல்கத்தா, தி இராமகிருஷ்ணா மிஷன், 1983) 3,300.

(8) வேதாந்த தேசிகருடைய தயா சதகத்தின் முதல் செய்யுள்.

(9) குலசேகர ஆழ்வார், மற்றொரு சந்தர்ப்பத்தில், வடமொழியில் இயற்றப்பட்ட, தன்னுடைய புகழ்பெற்ற முகுந்த மாலையில் (திருமாலுக்கு ஒரு புகழ்மாலை), சுவர்க்கத்திலுள்ள விலைமாதுகளிடம் கூட, உடல் உறவு கொள்வதை வெறுப்பதாகக் கூறுகிறார்.

*நீங்கள் வேறு, நான் வேறு,*
*என்ற எண்ணத்தால் ஏற்படும் இன்னல்களைத்*
*தாண்டிச் செல்வதற்கோ,*
*நரகத்தின் கடும் வேதனைகளிலிருந்து*
*தப்பிக்கவோ,*
*விண்ணுலகப் பகுதிகளின்*
*வசீகரமான விலைமாதுகளுடன்,*
*காதல் லீலைகள் புரிய வேண்டும்*
*என்பதற்காகவோ,*
*நான்,*
*உங்கள் கால்களில்*
*வணக்கம் செலுத்தவில்லை;*
*நான் உங்களை நாடுவது எதற்கெனில்*
*ஒவ்வொரு பிறவியிலும்,*
*உங்களை, என் இதயத்தில் இருத்திப் பாதுகாக்கத்தான்.*

(10) ஆ.க. இராமானுஜன், மூழ்குவோருக்குத் துதிப்பாடல்கள்-திருமாலுக்குக் கவிதைகள், நம்மாழ்வாரால் இயற்றப்பட்டது (பிரின்ஸ்டன், ந.ஜ.: பிரின்ஸ்டன் பல்கலைக் கழக அச்சகம், 1981), பக்கம் 124.

(11) திருமாலின் பல்வேறு ஆயுதங்களில், ஐந்து, மிக முக்கிய மாகக் கருதப்படுகின்றன: சுதர்ஸன சக்ரம், பாஞ்சஜன்ய சங்கம் (சங்கு), கௌமோதகி கதா (கதை), நந்தக கட்கா (கத்தி), சார்ங்க தனு (வில்).

(12) துறவிக் கவிஞரான தியாகராஜரைப் பற்றியும், இவ்வாறான கதையொன்று சொல்லப்படுகிறது. அவர், தன் யாத்திரை யின் பொழுது, திருப்பதிக் கோயிலில் நுழைகையில், மூலஸ்தானத்தைத் திரை மறைத்துக் கொண்டிருந்ததால், அவர் கடவுளைப் பார்க்க முடியவில்லை. பிறகு, அவர் புகழ்பெற்ற பாடலான 'தெர தீயக ராதா' (ஓ, வெங்கடரமணா! நீ ஏன் என் பொறாமைத் திரையை விலக்கக்கூடாது?) என்ற பாட்டைப் பாடினார். உடனே, திரை விலகியது. அவர் கடவுளின் சிறப்பான காட்சியைக் காணமுடிந்தது. அக்காட்சி, அவரை, இன்னொரு பாட்டைப் பாடத் தூண்டியது. அப்பாட்டுதான், ''வெங்கடேசா, நினு

ஸேவிம்பனு'' (ஓ, வெங்கடேசா! உன் அழகை ரசிப்பதற்குப் பதினாயிரம் கண்கள் தேவை).

(13) விசிஷ்டாத்வைத சமயப்பிரிவின் ஐந்து மதச் சடங்குகள் (1) தபம், வைணவ மதத்தை ஏற்றுக் கொள்பவனுடைய தோள்களில், சங்கு, சக்கர முத்திரைகளைச் சூடு போட்டுக் கொள்ளுதல். (2) புண்ட்ரம், ஒருவன் நெற்றியில் வைணவ சமயப்பிரிவின் குறியாகிய, நாமத்தை இட்டுக் கொள்ளுதல் (3) நாமம், திருமாலின் பணியாள் என்ற நிலையை நுட்பமாகத் தெரிவிக்கும் வகையில் ஒரு பெயர் வைத்துக் கொள்ளுதல் (4) மந்த்ரம், அஷ்டாக்ஷரி, அதற்குத் துணையான மந்திரங்களைச் சொல்லுவதற்கு முறையான ஆரம்பம். (5) யாகம், வழக்கமாக, சீடனுக்காக, ஆசானால் செய்யப்படும் திருமாலைத் தஞ்சம் புகுவதற்கான, மதச்சடங்கு.

(14) திருமழிசை ஆழ்வாருடைய சீடர், கணி கண்ணன், காஞ்சீபுரத்து மன்னனைக் குறித்துப் பாட மறுக்கையில், திருமழிசை ஆழ்வார், தன் சீடருடன், மரியாதையற்ற முறையில், வெளியேறும்படி கட்டளையிடப்பட்டார். அப்பொழுது, தனக்கேற்பட்ட உணர்ச்சியை, திருமங்கை ஆழ்வார், ''நான்முகன் திருவந்தாதியிலுள்ள'' பதினோராம் பாடலில் தெரிவிக்கிறார்.

*''நான்*
*என் நாவால்*
*மனிதர்களுடைய*
*பெருமைகளைப்*
*பாடமாட்டேன்.''*

(15) தியாகராஜரும் இவ்வாறான அனுபவத்தை அடைந்தார். தன் குடும்பக் கடவுளான ஸ்ரீ இராமனின் புனிதப்படுத்தப்பட்ட சிலையை ஒரு தடவை இழந்துவிட்டார். அவரைத் துன் புறுத்துவதற்காக, அவருடைய மூத்த சகோதரரால், அச்சிலை, காவேரியில் எறியப்பட்டது எனத் தெரிய வருகிறது. ஆனால், சில காலம் கழித்து, அது, அதிசயத்தக்க வகையில், அவரிடம் ஒப்படைக்கப்பட்டது. சிலையைப் பிரிந்த பொழுது, அவர் அனுபவித்த துன்பம், ''எந்து தாகிநாடோ'' (அவன் எங்கே ஒளிந்து கொண்டிருக்கிறான்?),

"நேனெந்து வெதகுதுரா" போன்ற சில பாட்டுகளில், மனதை வருத்தக் கூடியவகையில், வெளிப்படுகிறது.

(16) உலகம், நாடக மேடைக்கும், வாழ்க்கை, நாடகத்திற்கும் ஒப்பிடப்படுவது, பல கலாச்சாரங்களில் காணப்படும் கருத்து. ஆனால் ஸ்ரீரங்கம் கோயிலிலுள்ள திருமாலின் பெயர், "ரங்கநாத", உலக நாடக மேடையின் தலைவர் எனப் பொருள்படுவது, நம் கவனத்துக்குரியது.

(17) பகவத் கீதை, 10:22

(18) 7.5.23.

(19) 12.3.51.

(20) தாள்ளபாக்கா, பெரிய திருமலாச்சார்யாவுடைய ஸ்ரீ பகவத் கீதையின் தெலுங்கு மொழி பெயர்ப்புக்கு, ஜி.என். ரெட்டியின், முகவுரையைப் பார்க்க. (திருப்பதி ஸ்ரீ வெங்கடேஸ்வரா ஓரியண்டல் ரிஸர்ச் இன்ஸ்டிட்யூட், 1978) பக்கம் 28.

(21) மேற்படி., பக்கம் 28 - 29

(22) மேற்படி., பக்கம் 6

(23) இந்திய கலாச்சாரத்தின் அடிப்படைகள் (பாண்டிச்சேரி : ஸ்ரீ அரவிந்தர் ஆஸ்ரமம், 1980), பக்கம் 317.

(24) ரூப கோஸ்வாமியின் பத்யாவளிக்கு, அவருடைய முன்னுரையைப் பார்க்க (டாக்கா: டாக்கா பல்கலைக்கழகம், 1934).

(25) அன்னமாச்சார்யாவின் பேரன், சின்ன திருமலாச்சார்யாவினால், வடமொழியிலிருந்து தெலுங்கில் மொழிபெயர்க்கப்பட்ட, அன்னமாச்சார்யாவின் "ஸங்கீர்த்தன லக்ஷணம்" என்ற நூலில், ஜெயதேவருடைய கீத கோவிந்தத்தைப் பற்றி, திட்டவட்டமான குறிப்பொன்று இருக்கிறது.

(26) திருமால், புண்டரீகாக்ஷன் (தாமரை போன்ற கண்களை உடையவன்) என்று வருணிக்கப்படுவதற்குக் காரணம், அவருடைய கண்கள் தாமரை இதழ்கள் போல், விரிந்து என்று நீண்டும், வசீகரமாயிருக்கின்றன. இந்து சமயத்தி கடவுளான மன்மதனால், தன் அம்பாக உபயே ஐந்து மலர்களில், தாமரை ஒன்று.

(27) புடைவை என்பது, பஞ்சு அல்லது பட்டாலான ஆடை. இந்தியப் பெண்களால், உடலைச் சுற்றி, பிரதான ஆடையாக அணியப்படுகிறது.

(28) புனிதத் துளசி, மணம் கமழும் ஒரு மூலிகை. இந்துப் புராணங்களில், அது புனிதமாகக் கருதப்படுவதற்குக் காரணம், திருமாலுடன் அதற்குள்ள தொடர்புதான். அதனுடைய இலைகள், மதச்சடங்குகளில் உபயோகப் படுத்தப்படுகின்றன.

(29) இதே போன்ற மற்றொரு கருத்தை, துறவிக் கவிஞர், புரந்தரதாஸர், கன்னடத்தில் இயற்றிய புகழ்பெற்ற பாடலொன்றில், காணலாம்.

*ஏரியின் தண்ணீரை*
*ஏரியிலேயே கொட்டி,*
*வரங்கள் பெறும்*
*பக்தர்களைப் போல் இரு.*
*திருமாலின் கருணையால் பெறப்பட்ட செல்வத்தை,*
*அவருக்கு அளித்து,*
*மகிழ்ச்சியுடன் இரு.*

*தாமரை போன்ற*
*ஸ்ரீ புரந்தர விட்டல ராயருடைய*
*பாதங்களைப் பார்த்துக் கொண்டு,*
*நாட்களைக்கழி.*
*திருமாலின் கருணையால் பெறப்பட்ட செல்வத்தை*
*அவருக்கே அளித்து*
*மகிழ்ச்சியுடன் இரு.*

மஹாராஷ்டிர மாநிலத்தில், பந்தார்பூரில், புகழ்பெற்ற கோயிலிலுள்ள, திருமாலின் உருவச்சிலையின் பெயர் விட்டல ராயா.

ஸ்ரீரங்க-கத்யத்தில்

[illegible]வோர் எல்லோருடைய பாவங்களையும், போக்க வகை [illegible] பிரிந்த [illegible]யுள்ளது என்று போற்றப்படுகிறது, ஸ்ரீ [illegible] தாகிநாடோ'' ([illegible] கோயிலுடன் இணைந்திருக்கும், ஸ்வாமி

புஷ்கரிணி. பக்தர்கள், சில சமயம், திருமாலை, தெலுங்கில், ''கோனேடி ராய'', அதாவது, ''குளத்தின் தலைவன்'' என்று அழைக்கின்றனர். ''கொண்டல ராயா'' என்ற சொற்றொடர், குன்றுகளின் தலைவன் என்று பொருள்படும். அன்னமாச் சார்யாவின் பாடல்களில், இவ்விரு சொற்றொடர்களும், அடிக்கடி காணப்படுகின்றன.

(32) தூக்கப்பட்ட கை முத்திரை, அபயஹஸ்தம் என்ற முத்திரை யைக் குறிக்கும். தலைவன் அருகிலிருப்பதால், பக்தன் பயப்பட வேண்டாம் என்று அக்கை உறுதியளிக்கிறது. ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் கீழ் வலது கை, வரம் கொடுக்கும் நிலையிலுள்ளது, அச்சத்திலிருந்து காக்க உறுதியளிக்கும் நிலையிலில்லை. இதிலிருந்தும், கங்கை ஆறு, பிரமனைப் பற்றிய குறிப்புகளிலிருந்தும், அன்னமாச்சார்யா திரு மாலைப் பற்றி கூறுகிறார், ஸ்ரீ வெங்கடேஸ்வரின் உருவச் சிலைபற்றி அல்ல என்று தெளிவாகிறது.

(33) பிரமஸூத்திரங்களுக்குத் தான் செய்திருக்கும் புகழ்பெற்ற விரிவுரையான, ஸ்ரீ பாஷ்யத்தின் இறை வணக்கமான, முதல் செய்யுளில், இராமானுஜர், மூவுலகங்களையும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவை, ஸ்ரீநிவாஸனின் லீலைகள் என்று கூறுகிறார்.

(34) குமார சம்பவம், 1:3

(35) வே. இராகவன், தியாகராஜர் (புதுடில்லி, ஸாஹித்ய அக்காதெமி, 1983) பக்கம் 16.

(36) 3.1.45.

(37) சாந்தி பர்வ, 328.37

(38) ந. ரகுநாதன், ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம தோத்திரத்திற்குத் தனது முன்னுரையில் (பம்பாய், பாரதீய வித்யா பவன், 1978), பக்கம் 14.

(39) இப்பாட்டில் கூறப்படும் உணர்ச்சிகள், குஜராத்தித் துறவிக் கவிஞர், நரஸிம்ஹ மேத்தாவின் புகழ்பெற்ற ''வைஷ்ணவ ஜனதோ தேனே கஹியே ஜோ பீர பராயா ஜானீரே'' என்று துவங்கும் பாடலுடன் ஒப்பிடத்தகுந்தது.

(40) பகவத்கீதை, 9:23

# தெரிந்தெடுத்த ஆதார நூற்பட்டியல்

## தெலுங்கு நூல்கள்

**(அ) பிரதான மூல நூல்கள்**

தாள்ளபாக்கா அன்னமாச்சார்யா. அத்யாத்ம கீர்த்தனலு, சிருங்கார கீர்த்தனலு. தொடராக வெளியிடப்பட்ட நூல்களிலுள்ள பாடல்களின் தொகுப்பு. நூல்களின் பதிப்பு தொடர்கிறது. திருப்பதி, திருமலை-திருப்பதி தேவஸ்தானங்கள், 1936.

**(பி) இரண்டாம் பட்சமான மூல நூல்கள்.**

தாள்ளபாக்கா சின்ன திருவேங்களநாதா (சின்னண்ணா). அன்னமாச்சார்யா சரித்ரமு. கவிதையில் வாழ்க்கை வரலாறு- வேடூரி ப்ரபாகர சாஸ்திரியின் புலமையுள்ள முன்னுரையுடன். திருப்பதி, திருமலை-திருப்பதி தேவஸ்தானங்கள், 1949.

தாள்ளபாக்கா பெரிய திருமலாச்சார்யா - ஸ்ரீ பகவத்கீதை. ஜி.என். ரெட்டியின் புலமையுள்ள முன்னுரையுடன். திருப்பதி, ஸ்ரீ வெங்கடேஸ்வரா ஓரியண்டல் ரிஸர்ச் இன்ஸ்டிட்யூட், 1978.

ரால்ல பள்ளி அனந்த கிருஷ்ண சர்மா, "அன்னமாச்சார்யுனி கவிதா". வாணி, 7:5, 1955.

வேடூரி ஆனந்தமூர்த்தி. தாள்ளபாக்கா கவுல கிருதுலு. ஹைதராபாத், 1974.

தாள்ளபாக்கா கவுல பதகவிதலு, ஹைதராபாத், 1976.

முட்நூரி ஸங்கமேசம். அன்னமாச்சார்யா - ஸாஹிதி - கௌமுதி. திருப்பதி, திருமலை - திருப்பதி தேவஸ்தானங்கள், 1981.

பாலாந்த்ரபு ரஜினிகாந்த ராவ். ஆந்த்ர-வாக்கேய கார- சரித்ரமு. விஜயவாடா, விசாலாந்த்ரா பப்ளிஷிங் ஹௌஸ், 1975.